

# அம்ருதா

**Amrudha Tamil Monthly**

Volume 18 Issue 8
ஆண்டு 18 இதழ் 8

March 2024 Rs.30
மார்ச் 2024 ரூ.30

●கயல் ●த. அரவிந்தன் ●வ. அதியமான் ●ஈவா ஹுசன் ●ராம் முரளி
●இளங்கோ ●முபீன் சாதிகா ●தாமரைபாரதி ●டோனி மாரிசன்
●ஸிந்துஜா ●சுப்ரபாரதிமணியன் ●பாவண்ணன் ●புதியமாதவி ●ஹரணி
●வினோதினி பாலு சத்யா ●சந்தியா நடராஜன்

# போராடும் விவசாயிகள் வஞ்சிக்கும் அரசு!

ஆண்டு 18 இதழ் 8



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

மார்ச்-2024 விலை ரூ. 30

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: சந்ரு
மனநலம்: டாக்டர் மா. திருநாவுக்கரசு
வரலாறு: பொ. வேல்சாமி
மொழிபெயர்ப்பு: நாகரத்தினம் கிருஷ்ணா
திரைப்படம்: விட்டல்ராவ்
கல்வி: பேரா. தியாகராஜன்
அறிவியல்: பத்ரி சேஷாத்ரி
இலக்கியம்: தேவேந்திரபூபதி
நாடகம்: அ. ராமசாமி
ஊடகம்: இளைய அப்துல்லாஹ்
சூழலியல்: மோகன்ராம்
இசை: ரவிசுப்பிரமணியன்
விளையாட்டு: ஆர். அபிலாஷ்
தற்கால நிகழ்வுகள்: செ. சண்முகசுந்தரம்
அரசியல்: மருதன்

வடிவமைப்பு: பிரபாகரன்

அம்ருதா
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


# இந்த இதழில்...


04 **மீண்டும் விவசாயிகள் போராட்டம்**
பிரபுதிலக்

05 **முயங்கொலிக் குறிப்புகள்**
கயல்

06 **சிறுகதை**
த. அரவிந்தன்

13 **கவிதை**
வ. அதியமான்

16 **நேர்காணல்**
ஈவா ஹுசன்; தமிழில்: ராம் முரளி

22 **நீர்வழிப் படூஉம்'மும் இன்ன பிறவும்...**
இளங்கோ

27 **சிறுகதை**
முபீன் சாதிகா

33 **பெரியசாமியின் அகப்பிளவு**
தாமரைபாரதி

35 **டோனி மாரிசன் நோபல் உரை**
தமிழில்: ஸிந்துஜா

42 **டவுன் சைசிங்**
சுப்ரபாரதிமணியன்

46 **ஒரு புதிய தொகுப்புக்கான கனவு**
பாவண்ணன்

52 **சிறுகதை**
ஹரணி

60 **கிராம்சி புரண்டு படுக்கிறார்**
வினோதினி பாலு சத்யா

62 **சென்னையின் காஸ்மோபாலிட்டன் பேட்டை**
சந்தியா நடராஜன்

# போராடும் விவசாயிகள் வஞ்சிக்கும் அரசு!

**பிரபுதிலக்**

நேதாஜி சுபாஷ் சந்திரபோசின் புகழ்பெற்ற கோஷமான 'டெல்லி சலோ' என்ற பெயரில் டில்லியில் விவசாயிகள் மீண்டும் போராட்டத்தைத் தொடங்கியுள்ளனர்.

மத்திய அரசு புதிதாக கொண்டு வந்த மூன்று வேளாண் சட்டங்களை திரும்ப பெற வேண்டும் என்பதுடன் சில கோரிக்கைகளையும் முன்வைத்து கடந்த 2020ஆம் ஆண்டு டெல்லி எல்லைகளை முற்றுகையிட்டு விவசாயிகள் தொடர் போராட்டம் நடத்தினர். அரசின் கடுமையான அடக்குமுறைகளையும் மீறி ஓராண்டுக்கும் மேல் தொடர்ந்து நீடித்த அந்த போராட்டம் கோடிக்கணக்கான விவசாயிகள் பங்கேற்புடன் உலகம் முழுவதும் கவனம் பெற்றது. இறுதியில், மூன்று வேளாண் சட்டங்களையும் ரத்து செய்ய மத்திய அரசு சம்மதம் தெரிவித்ததும், சில கோரிக்கைகளுடன் விவசாயிகள் போராட்டத்தை திரும்ப பெற்றனர்.

ஆனால், மூன்று வேளாண் சட்டங்களை மட்டும் ரத்து செய்த மத்திய அரசு, குறைந்தபட்ச ஆதார விலையை சட்டபூர்வமாக்குதல், அனைத்து பயிர்களுக்கும் உத்தரவாதம் அளிக்கப்பட்ட கொள்முதல் விலை, விவசாயிகள் மற்றும் விவசாயத் தொழிலாளர்களுக்கான கடன் தள்ளுபடி, மின்சாரத்துறையில் தனியார்மயமாக்கலை நிறுத்துதல், லக்கிம்பூர் கேரி விவசாயிகள் படுகொலையின் முக்கிய குற்றவாளியான அஜய் மிஸ்ரா தேனியை பதவி நீக்கம் செய்து வழக்கு தொடர்வது உள்ளிட்ட விவசாயிகளின் கோரிக்கைகள் எதனையும் கடந்த இரண்டு ஆண்டுகளில் நிறைவேற்றவில்லை.

இதனால், இந்தக் கோரிக்கைகளை வலியுறுத்தி கடந்த இரண்டு ஆண்டுகளில் சம்யுக்த கிசான் மோர்ச்சா தலைமையில் பல்வேறு போராட்டங்களை விவசாயிகள் தொடர்ச்சியாக முன்னெடுத்து வந்தனர். கடந்த ஜனவரி 26 அன்று கூட நாடு முழுவதும் மாபெரும் டிராக்டர் பேரணியை விவசாயிகள் நடத்தினர்.

ஆனாலும், விவசாயிகளின் கோரிக்கைகளை மத்திய அரசு கண்டுகொள்ளாத நிலையில்தான், மீண்டும் டெல்லியில் மாபெரும் போராட்டத்தை விவசாயிகள் முன்னெடுத்துள்ளனர். வேளாண் விளைபொருட்களுக்கு குறைந்தபட்ச ஆதார விலையை உறுதி செய்ய சட்டம் கொண்டுவர வேண்டும், எம்.எஸ். சுவாமிநாதன் ஆணையத்தின் பரிந்துரைகளை அமல்படுத்த வேண்டும், விவசாயிகளுக்கும் விவசாயம் சார்ந்த தொழிலாளர்களுக்கும் ஓய்வூதியம் வழங்க வேண்டும் என்பதுதான் விவசாயிகளின் கோரிக்கை.



இந்த கோரிக்கைகளை காதுகொடுத்து கேட்பதற்கு பதிலாக வழக்கம்போல் போராட்டத்தை ஒடுக்குவதிலேயே மத்திய அரசு கவனம் செலுத்தி வருகிறது. டெல்லி, பஞ்சாப், ஹரியானா மாநில எல்லைகள் மற்றும் டெல்லி மாநகர் முழுவதும் 144 தடை விதிக்கப்பட்டுள்ளது. டெல்லி எல்லையில், ஆயுதமேந்திய போலீஸாரும் துணை ராணுவப் படையினரும் காவலில் உள்ளனர். நகர் முழுவதும் முள் கம்பி வேலிகள், சிமெண்ட் கற்கள் கொண்டு தடுப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. போர்க்களம் போல் காட்சியளிக்கிறது டில்லி. காவல்துறை துப்பாக்கி சூட்டில் இரு விவசாயிகள் கொல்லப்பட்டுள்ளனர்.

வேளாண் விஞ்ஞானி எம்.எஸ். சுவாமிநாதனுக்கு பாரதரத்னா அறிவித்த மத்திய அரசு, அவரது பெயரில் அமைக்கப்பட்ட குழுவின் அறிக்கையை அமல்படுத்த வேண்டும் என்று போராடும் விவசாயிகளை விரோதியாக பார்ப்பது வியப்பளிக்கிறது. எம்.எஸ். சுவாமிநாதனின் மகளும் பொருளாதார நிபுணருமான மதுரா ஸ்வாமிநாதன், "அவர்கள் விவசாயிகள், கிரிமினல்கள் அல்ல. நாம் நம்முடைய 'அன்னதாதா'க்களிடம் பேச வேண்டும். அவர்களை கிரிமினல்களைப் போல நடத்தக் கூடாது. இந்த பிரச்சினைக்கு தீர்வு காணவேண்டும். எனது தந்தையும் வேளாண் விஞ்ஞானியுமான எம்.எஸ். சுவாமிநாதனை கவுரவிக்க எண்ணினால், எதிர்காலத்துக்காக நாம் திட்டமிட்டுக் கொண்டிருக்கும் அனைத்து உத்திகளிலும் விவசாயிகளை நாம் சேர்த்துக்கொள்ள வேண்டும்" என்று தெரிவித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

மத்திய அரசின் காதுகளுக்கு இந்த குரல் கேட்குமா? ●

கவிதைத் தொடர்-12

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

**ஓவியம்: நடேஷ்**



## 30. அணைப்பதற்கு முந்தைய வெளிச்சம்

‘ஒன்பது எட்டு
ஒன்பது நான்கு
ஒன்று நான்கு
ஏழு ஆறு
ஏழு ஒன்று.
சரியா?
ஒரு முறை
சரி பார்த்துக்கொள்வோம்.
மறுபடி சொல்லுங்கள்’
இம் முனையிலிருந்து
இழைந்தது மென்குரல்.

எதிர் முனை
கரகரத்த குரல் ஒப்புவித்தது
‘ஒன்பது எட்டு ஒன்பது
நான்கு ஒன்று நான்கு
ஏழு ஆறு ஏழு
ஒன்று.’

அலைபேசி எண்களைக்கூட
வெவ்வேறு விதமாகச் சொல்லி
கேட்பவரைக் குழப்புவதோடு
தானும் குழம்புகிறவர்களை
எப்போதைக்குமாய்ப் பிணைக்கிற
காலத் திரி
கண்ணுக்குத் தெரிவதில்லை.

ஆறேழு நண்பர்களின் கூடுகையில்
அத்தனை பேரையும்
பன்முறை அழைத்து
எதுவெல்லாம் விருப்பமென்று கேட்டு
எல்லாவற்றையும் உறுதி செய்கிற எவரும்
கேட்டறிய முயல்வதில்லை
இந் நொடி இணக்கமான ஒன்றா
என்று
விளக்கணைக்கும் முன்
தம் இணையிடம்.

(தொடர்ச்சி 59ஆம் பக்கம்)

# திமிங்கல இதயம்

## த.அரவிந்தன்

“நீ ஏன் எப்போதும் இந்தத் தண்டவாளத் தூணின் முனையிலேயே, தவிப்போடு உட்கார்ந்திருக்கிறாய்?”

“இது பீரங்கியைப் போல இருக்கிறது.”

“பீரங்கியா? சாய்வாக, மேலெழுந்தவாறு தூண் நிற்கிறது என்பதாலேயே அது பீரங்கியாகிவிடுமா?”

“அது தெரியாது. ஆனால், என் கூட்டை, என் குஞ்சுகளைக் குறிபார்த்தவாறே இருக்கிறது.”

“ஓ, அதனால்தான் உன் நெஞ்சை அதற்கு நேராக காட்டிக்கொண்டு, அதன் மேலேயே உட்கார்ந்திருக்கிறாயா? ஒருவேளை, பீரங்கியாக இருந்து, அது வெடித்தால், நெருப்பில் கொசு பொசுங்கும் நேரம்கூட, நீ உயிர்த்திருக்க வாய்ப்பு இல்லை என்பது உனக்குத் தெரியுமா?”

“அதுதெரியாது. ஆனால்,பீரங்கியாகஇருந்தாலும் என் உயிரைக் கடந்துதான் என் குஞ்சுகளைத் தொடமுடியும் என்பது மட்டும் தெரியும்.”

தூங்குமூஞ்சி மரங்கள் நிறைந்த பெரம்பூர் ரயில்பெட்டி தொழிற்சாலை பகுதியின் ஒரு சாலையில்தான் அந்தத் தண்டவாளத் தூண் இருக்கிறது. ஒரு காலத்தில் அந்தத் தண்டவாளத் தூண் தொழிலாளர்களை அனுமதிக்கும் தடுப்பு அரண்போல இருந்திருக்க வேண்டும். தற்போது, தடுப்பு அரண் அவசியமற்று போய், தண்டவாளத் தூண் மேலெழுந்தவாறு நிற்கிறது. அதன் உயரத்தையொட்டி கிடைமட்டமாக தாழ இருக்கும் ஒரு தூங்குமூஞ்சி மரத்தின் கிளையொன்றில்உட்கார்ந்திருந்தகருந்தலை மைனாவும் தண்டவாளத் தூணின் முனையில் உட்கார்ந்துகொண்டு, அதன் முதுகுக்குப் பின்னால்,நேராக,தூங்குமூஞ்சி மரத்தின் தாழக்கிளையிலிருந்த கூட்டையும் குஞ்சுகளையும் பாதுகாத்தவாறுஇருந்தமைனாவும்சலிப்புஇல்லாமல் பேசிக்கொண்டன. இலைகளுக்கு ஊடாகப் புகுந்து வந்த காலைச் சூரியனின் கதிரொளியில் அவற்றின் மஞ்சள் அலகுகளும் மஞ்சள் கால்களும் கூடுதலாகவே ஒளிர்ந்தன.



“அதைப் பார்த்தால்தான் பீரங்கியைப் போல இருக்கிறது என்கிறாயே, பிறகு ஏன் அதற்கு நேராகப் போய் கூட்டைக் கட்டினாய்? இங்கு வேறு மரங்களா இல்லை?”

“அருகில் புதர்கள் அதிகமாக இருக்கின்றன. புழுக்கள் அதிகம் கிடைக்கும் என்று இங்கே கூட்டைக் கட்டினேன். அப்போது, இது பீரங்கியைப் போல தெரியவில்லை. முட்டைகளை இட்டு, குஞ்சுகள் பொரிந்து, அவற்றுக்கு இரை தேடிப் போகிற போதுதான், எதேச்சையாக இது பீரங்கியைப் போல தென்பட்டது. பிறகு,இது அழுத்தமாக பீரங்கியாகவே மனதில் பதிந்து தொடர்ந்து பதைபதைப்பை அதிகரிக்கச் செய்து வருகிறது. இதையெல்லாம் உன்னால் இப்போது புரிந்துகொள்ள இயலாது. நீ முட்டைகள்இட்டு,குஞ்சுகள்பொரிந்து,அவற்றுக்கான வானத்தை உருவாக்கிக் கொடுக்கும் காலத்தில்தான் உன்னால் முழுமையாகப் புரிந்துகொள்ள முடியும்.”

“சாடைப் பீரங்கி வேண்டாம். அந்தக் காலம் வெகு தொலைவில் இல்லை. இந்தப் பருவத்திலேயே ஒரு இணையைக் கவர்வேன். நீ கூறும் அனுபவத்தைப் பெறுவேன்.”

பட்டுப்போன மரக்கிளை உடைவதுபோல திடீரென சத்தம் வந்தது. இரு பக்கமும் செம்பழுப்புப் பாறைகளாக இறக்கைகளை விரித்துக்கொண்டு பருந்து




ஒன்று கீழிறங்கி வந்தது. பீரங்கி முனையிலிருந்து மைனா விறுக்கெனப் பறந்து, அதைத் துரத்தியது. கூடவே கருந்தலை மைனாவும் துரத்தியது. பருந்து பின்வாங்குவதுபோல போக்கு காட்டி, துரத்தும் மைனாக்களில் ஒன்றைக் கவ்விச் செல்வதற்காக திரும்பப் பார்த்தது. ஒரு அண்டங்காக்கை வந்து துரத்தியது. முட்டையிட்டு அடைகாத்து வந்த இன்னும் சில காக்கைகளும் வந்து துரத்தின. எதையும் சட்டை செய்யாதது போல, அலட்சியமாக, பருந்து கொஞ்சம் கொஞ்சமாக விலகி உயரத்துக்குப் போனது.

“பேறுக் காலம் வந்தாலே, இதே எழவாப் போகுது. அதுக குஞ்சுகள நாம தூக்குறோமா இல்ல தூக்கவாவது நினைக்கிறோமா. எனக்குத் தெரிஞ்சு கடந்த மூணு நாள்ல மட்டும் அஞ்சு குஞ்சுகள இந்த வரிசையில் உள்ள மரங்கள்ல மட்டும் தூக்கியிருக்குங்க. என்ன படைப்போ அது. நாங்க பறந்தா மேலேயேதான் பறப்போம்ங்கிறது. பசிச்சா கீழ வந்து பொணத்தையே திம்போங்குறது” என்றவாறே ஒரு காக்கா கத்திக்கொண்டு அதன் கூட்டுக்குப் போனது. மற்ற காக்கைகளும் அதனதன் இடத்துக்குப் போயின.

“கொஞ்சம் தூரம் நானும் போய் வருகிறேன்.

அங்கொரு தோட்டத்துத் மாமரத்தில் ஒரு இணையை நேற்று பார்த்தேன். எனக்கு ஏற்றவன் போலவே இருந்தான்.”

“நீயாகத் தேடிப் போகாதே. அவன் வரட்டும்.”

“உன் காலத்தை வைத்து பேசாதே. இப்போதெல்லாம் நாமும் கொஞ்சம் ஈர்க்க வேண்டியுள்ளது. எதேச்சையாகப் போவதுபோல போய், பார்க்காததுபோல பார்த்து, உடலைச் சிலுப்பாததுபோல சிலுப்பி, இலைமறை காயாக அழைக்க வேண்டியுள்ளது.”

“அது என்ன… என் காலம், உன் காலம்? நான் பெற்றுவிட்டேன். நீ பெறப் போகிறாய்.”

“அதேதான், நீ பெற்றுவிட்டாய். நான் இனிமேல்தான் பெறப் போகிறேன்” என்றவாறே கருந்தலை மைனா பறந்து போனது.

பீரங்கி முனைக்குத் திரும்பிய மைனா, இந்த முறை நெஞ்சைக் காட்டாமல் முதுகைக் காட்டியவாறு உட்கார்ந்தது. கொஞ்சம் நேரம் அசைவற்று உயிரற்றது போலவே இருந்தது. அதற்கு அதன் இணையின் ஞாபகம் வந்தது. இரண்டு நாட்களுக்கு முன், இதேபோல ஒரு பருந்து வந்தபோது, இரண்டும் விரட்டிக்கொண்டு சென்றன. குறித்த தூரத்தில் இது திரும்பிவிட்டது. அது விரட்டிக்கொண்டே சென்றது. பிறகு திரும்பவே இல்லை. குஞ்சுகள் அலகுகளைத் திறந்துதிறந்து மூடுவதுபோல தெரிந்ததும் அசைவுக்கு வந்து, இரை தேடிப் பறந்து, ஒரு புதருக்கு அருகில் தரையிறங்கியது. அங்கு வந்ததும் சலிப்பாக இருந்தது. அந்தப் பகுதியில் இருந்த இரைகள் அனைத்தையும் மீதம் வைக்காமல் வேட்டையாடிவிட்டது போல இருந்தது. வேறு எங்காவது போகலாமா என்றவாறே காற்றை அலகால் குத்திகுத்தி வழி ஏற்படுத்திச் செல்வது போன்ற, அதற்கே உரிய துள்ளல் நடையில் நடந்து, ஒரு புதருக்கு உள்ளாக நுழைந்து, தலையைத் தூக்கி மேலே பார்த்தது. இலைகளையும் முட்களையும் தவிர ஒன்றும் தென்படவில்லை. வெளியேறி மீண்டும் நடந்தது. அதி மின்சக்தியைக் கடத்துவதற்கான ராட்சத மின்வயர்கள் சுருட்டப்பட்ட மரப்பலகைகளாலான உருளைகள் இருந்த பகுதிக்கு வந்து தேடியது. மக்கிப்போன பலகை ஒன்று கிடந்தது. அதில் கரையான்கள் அரித்துக்கொண்டிருந்தன. அவற்றைக் கொத்த முடிந்த அளவு கொத்திக்கொண்டு, ஒன்றிரண்டை விழுங்கியவாறே பறந்து வந்தது.

கூட்டிலிருந்த தூவி முளைக்காத மூன்று குஞ்சுகளும் அலகுகளைத் திறந்து காட்டின. கொஞ்சம் கொஞ்சமாக மூன்றுக்கும் ஊட்டிவிட்டது. மீண்டும் பறந்து போய், இரையை எடுத்துக்கொண்டு வந்தது. மீண்டும் போனது. மீண்டும் வந்தது. மீண்டும் போனது. அருகில் கண்டெய்னர் லாரியின் டயர் ஏற்படுத்தியிருந்த சிறிய பள்ளத்தில் நேற்று பெய்த மழை நீர் தேங்கி இருந்தது. அதில், உடலையும் அவ்வப்போது தலையையும் நனையச் செய்து, சிலுப்பியவாறு சிறிது நேரம் விளையாடிக் கொண்டிருந்தது. வாயில் தண்ணீரை நிரப்பிக்கொண்டு மீண்டும் வந்தது. கூட்டில் இரண்டு குஞ்சுகள் மட்டும் இருந்தன. இரண்டையும் தண்ணீரைப் பருகச் செய்துவிட்டு, மற்றது தரையில் விழுந்திருக்குமோ என்று வட்டமிட்டு பறந்தும் தரையிலிறங்கி நடந்தும் தேடிப் பார்த்தது. எங்கும் தென்படவில்லை. கொஞ்சம் அசந்தது தப்பாகிவிட்டது. பருந்து அல்லது பாம்பு கவ்வி சென்றிருக்குமோ என்று கூட்டுக்குத் திரும்பி இரண்டு குஞ்சுகளின் கதகதப்பில் உட்கார்ந்திருந்தது. கிளையொன்றில் அணில் ஒன்று `கீச்கீச்‘ என்று வாலை தூக்கி அடித்தவாறு கத்திக் கொண்டிருந்தது. எரிச்சலாக இருந்தது. அதைப் பறந்து போய்க் கொத்தலாமா என நினைத்தது. பீரங்கி முனை குறி பார்ப்பதுபோல இருந்தது. பறந்து வந்து அதன் முனையில் நெஞ்சைக் காட்டியவாறு உட்கார்ந்தது. இணை தேடிப் போயிருந்த கருந்தலை மைனா அவசரமாகப் பறந்து வந்து தாழக் கிளையில் உட்கார்ந்தது.

“இந்த இடத்தைவிட்டு சீக்கிரம் போவோம். உண்டிகோல் மனிதர்கள் மூன்று பேரை அங்கு பார்த்தேன். அவர்கள் அங்கு வந்ததும் அந்தப் பகுதியே போர் நடக்கும் இடம்போல மாறிவிட்டது. சரக்சரக்கென்று உண்டிகோல்கள் மூலம் குறிபார்த்து கல்லெறிந்தார்கள். கிளைகளிலிருந்த நாலைந்து காக்கைகள், மூன்று நான்கு அணில்கள், ஒன்றிரண்டு மைனாக்கள் ரத்தக் காயங்களோடு அடிபட்டு கீழே விழுந்தன. அவற்றைப் பொறுக்கி எடுத்து, அவர்களுடைய தோளில் தொங்கிய துணிப்பைகளில் போட்டுக்கொண்டு, இந்தப் பக்கமாகத்தான் வருகிறார்கள். அங்கிருந்த பறவைகள் அப்படி அப்படியே அதனதன் கூட்டை விட்டு பறந்து போய்விட்டன. நாமும் பறந்து போய்விடுவோம். வா.”

“பூச்சிகளை, புழுக்களை நாம் அடித்து உண்பதுபோல அவர்களும் அப்படிச் செய்யலாம். ஆனால், குஞ்சுகள் இருப்பதால் என்னை அவர்கள் எதுவும் செய்ய மாட்டார்கள். நான் கூட்டில் போய் உட்கார்ந்துகொள்கிறேன். நீயும் என்னோடு வந்து உட்கார்ந்து கொள்.”

“எனக்கு அப்படித் தோன்றவில்லை. அவர்களால் நிச்சயம் ஆபத்து நேரும். விழுந்த காக்கைகளை கம்பி வேலிகளைத் தாண்டி எடுக்க நுழைந்த போது, அவர்களிடம் அந்த இடத்துக்கு உரியவன் விசாரித்தான். அப்போது அதுதான் அவர்களுடைய வேலையே என்று கூறினார்கள். மின்சார ரயிலில் ஏறி வில்லிவாக்கம், கொரட்டூர், அம்பத்தூர், திருமுல்லைவாயில், ஆவடி, பட்டாபிராம் என அரக்கோணம் வரை ஒவ்வொரு ஸ்டேஷனாக இறங்கி, ரயில்வே பகுதிகளில் உள்ள மரங்களில் வேட்டை நடத்துவார்களாம். சில நேரங்களில்

காடு, கழனி, ஏரிப் பகுதிகளுக்கும் தேடிச் சென்று வேட்டை நடத்துவார்களாம். மஞ்சள் காமாலைக்கு காக்கைகள் நல்லதாம். கர்ப்பிணிப் பெண்களுக்கு அணில்கள் நல்லதாம். அதிக இன்பத்துக்கு நாம் பயன்படுவோமாம். அவர்களிடம் நிறைய பேர் வந்து வாங்கிச் செல்வார்களாம். அதனால், அவர்களிடம் கரிசனம் இருக்க வாய்ப்பு இல்லை."

"அவர்களால் எனக்கு ஆபத்து வர வாய்ப்பு இல்லை. அது போன்ற உண்டிகோல் மனிதர்கள் இரண்டு பேரை நானும் பார்த்திருக்கிறேன். பிச்சாவரம் சதுப்புநில அலையாத்தி காடுகளைக் கடந்து, கடற்கரையையொட்டி இருந்த ஈச்சமரத்தின் மட்டைகளுக்கு இடையே கட்டப்பட்டிருந்த கூட்டில்தான் நான் பிறந்தேன். சிறகு முளைத்து, உலகை நான் புரிந்து பார்க்கத் தொடங்கியபோது, என் தாய் உள்பட உடன்பிறந்தோர் அத்தனை பேருமே பறந்து போயிருந்தனர். ஏனோ, நான் மட்டும் பறக்கத் தாமதம். அந்தக் கூட்டின் தனிமையே எனக்குப் பெரிய துயரத்தைக் கொடுக்கக் கூடியதாக அப்போது இருந்து கொண்டிருந்தது. ஒரு அதிகாலையில் நீலத்திமிங்கலம் ஒன்று அலைகளுக்கு இடையே கரையில் கிடந்ததைப் பார்த்தேன். அதன் நீள அகலத்தை எப்படிச் சொல்வது எனத் தெரியவில்லை. கடலே மீனாக உருக்கொண்டால் எப்படி இருக்குமோ அவ்வளவு பெரிதாக இருந்தது. அது அங்கு கிடக்கும் தகவல் எப்படிக் கிடைத்தது என்றே தெரியவில்லை. பேண்ட், சட்டை நன்றாக அணிந்த ஓர் ஆள் கோடரியோடும் பெரிய இரும்பு டிரம்மோடும் அங்கு வந்தார். அவரைச் சதுப்புநில நீர்வழியைக் கடந்து கொண்டுவந்து விட்ட படகு திரும்பிப் போயிருக்க வேண்டும். ஊர்க் கட்டுப்பாடா அல்லது மீன்பிடி தடைக்காலமா எனவும் தெரியவில்லை. யாரையும் அங்கு காணவில்லை. அவர் திமிங்கலத்தின் அருகில் போய் பார்த்து, அது அழுகாமல் இருப்பதை உறுதி செய்தார். கரையில் எப்போதோ பயன்படுத்தி கைவிடப்பட்ட வடக்கயிறு ஒன்று கிடந்தது. அதை எடுத்துச் சென்று, திமிங்கலத்தைக் கட்டுவதற்கு முயற்சி செய்தார். திமிங்கலத்தின் எடை கிட்டத்தட்ட இருநூறு டன் இருக்கும். அதைக் கயிற்றைக் கட்டி இழுத்தாலும் தனி ஒருவரால் அதை அசைக்கக்கூட முடியாது. அவருக்கு ஏதோ அவர் பலம் குறித்து அதீத எண்ணம். ஆனால், அவரால் திமிங்கலத்தை அதன் அடிவயிற்றோடு சேர்த்து, கயிற்றை ஒரு சுற்றாகக்கூட இழுத்து வர முடியவில்லை. பிறகு, கோடரியோடு திமிங்கலத்தின் மேலேறி நின்றுகொண்டு, அதை வெட்டுவதற்கான வாட்டத்தைப் பார்த்தார். அதுவும் அவரால் முடியவில்லை. அலைகளின் தொடர் மோதலால் திமிங்கலத்தின் மேலேயே சறுக்கி கீழே விழுந்தார். அதற்கு மேல் அவர் எதுவும் முயற்சி செய்யவில்லை. கரையில் வந்து உட்கார்ந்து, வானக் கடலில் மஞ்சள் திமிங்கலம் நீந்திநீந்தி மேலேறிப் போவதையே பார்த்துக் கொண்டிருந்தார். ஐந்து மணி நேரம் கடந்திருக்கும். கடல் உள்வாங்கியிருந்தது. கோடரியோடு எழுந்து சென்றார். அப்போது உண்டிகோல் மனிதர்கள் இரண்டு பேர் வந்தார்கள். அவர்கள் இளைஞர்களாக அழுக்கு உடைகளை அணிந்தவர்களாக இருந்தார்கள். அவர்களின் கைகளில் பிடிக்கப்பட்டிருந்த மடையான்கள், கொக்குகள், நீர்க்கோழிகள் நூலால் கோர்க்கப்பட்டு தொங்கிக் கொண்டிருந்தன. எனக்குக் கீழாக வந்தபோது, என்னை நின்று உற்றுப் பார்த்தார்கள். எனக்கு நடுக்கமாக இருந்தது. முதல் சிறகடிப்பே, இறப்புக்கான சிறகடிப்போ என்பது போல இருந்தது. ஆனால், அவர்கள் `நல்வரவு' என்று கூறி, என்னைக் கடந்து, திமிங்கலத்துக்கு அருகில் சென்றார்கள். அவர் அலைகள் இல்லா நிலையிலும் திமிங்கலத்தின் மேலேறி நிற்பதும் கோடரியை வெட்டத் தூக்கிய நிலையில் நழுவி விழுவதுமாகவும் இருந்தார்.

> **மனித இதயங்களுக்கும் மிருக இதயங்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை; இதயங்களுக்கும் அவற்றைக் கொண்டிருக்கும் உயிரினங்களின் செயல்பாடுகளுக்கும் உள்ள தொடர்புகள். இப்படி நிறைய**

`இதை ஏன் மேலேறி நின்று வெட்டுகிறீர்கள். கீழேயே நின்று வெட்டலாமே?' என்று அவர்களில் கரும்பச்சை நிறக் கட்டம் போட்ட லுங்கியுடன் இருந்தவன் கேட்டான்.

`நீங்கள் வெட்டித் தருகிறீர்களா? பணம் கொடுத்துவிடுகிறேன்' என்றார்.

`பணம் வேண்டாம். எத்தனை துண்டுகளாக வெட்ட வேண்டும் என்று மட்டும் சொல்லுங்கள்' என்றான் அவன். பறவைகளையும் உண்டிகோல்களையும் கரைமணலில் வைத்துவிட்டு இருவரும் போனார்கள்.

`இதயத்தை மட்டும் வெட்டி எடுக்க வேண்டும்' என்றார்.

`ஏதாவது நோய்க்கு மருந்தாகச் சாப்பிடப் போகிறீர்களா?' என்றான் காக்கிநிறக் கால்சட்டை அணிந்தவன். அவர் சிரித்தார்.

`நான் ஒரு மருத்துவன். மிருகங்கள், பறவைகளின் இதயங்களைச் சேகரித்து வைத்து ஆராய்ச்சி செய்பவன். யானை, குதிரை, ஒட்டகம், புலி, சிங்கம், கரடி, சுறா, பாம்பு, பறவைகள், முதலை, நீர்யானை என இரண்டாயிரத்துக்கும் மேற்பட்டவற்றின்

இதயங்களைக் கொண்டு அருங்காட்சியகம் வைத்திருக்கிறேன். எல்லா இதயங்களும் வனம் உள்ளிட்ட துறைகளிடம் முறையாக அனுமதிப்பெற்று சேகரித்தவை. உலகின் பெரிய பாலூட்டி இனமான திமிங்கலத்தின் இதயம் மட்டும் கிடைக்காமல் இருந்தது' என்றார்.

`ஒரே நாளில் அழுகிவிடுமே. எப்படி ஆராய்ச்சி செய்வீர்கள்?' என்றான் லுங்கிக்காரன்.

`இறந்த மூன்று மணி நேரத்தில் எடுத்துவிட்டால், இதயம் கெடாமல் இருக்கும். அதற்குப் பிறகு ஃபார்மெலின் சொலியூஷன் ஊற்றப்பட்ட கண்ணாடி குடுவையில் வைத்துவிட்டால், ஒன்றும் பிரச்னை இல்லை. அது எத்தனை ஆண்டுகள் ஆனாலும் கெடாமல் இருக்கும். ஆனால், ஆறு மாதங்களுக்கு ஒரு முறையோ அல்லது ஆண்டுக்கு ஒரு முறையோ சொலியூஷனை மட்டும் மாற்றிவிட வேண்டும். இந்தத் திமிங்கலம் இறந்து ஐந்து மணி நேரத்தைக் கடந்தாலும் கடலின் அலையிலேயே கிடப்பதால், உடனே கெட்டுப் போயிருக்க வாய்ப்பு இல்லை' என்றார்.

`இந்த இதயங்களை வைத்து அப்படி என்ன ஆராய்ச்சி செய்வீர்கள்?' என்றான் கால்சட்டைக்காரன்.

`அதைக் கூறினால், உங்களுக்குப் புரியாது. மனித இதயங்களுக்கும் மிருக இதயங்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை; இதயங்களுக்கும் அவற்றைக் கொண்டிருக்கும் உயிரினங்களின் செயல்பாடுகளுக்கும் உள்ள தொடர்புகள். இப்படி நிறைய' என்று நேரத்தை வீணடித்துக் கொண்டிருப்பது போன்ற அலுப்போடு அவர் கூறினார்.

`நீங்கள் சொல்வது வேண்டுமானால், புரியாமல் இருக்கலாம். ஆனால்,எங்களால் இதயங்களை வெட்டி எடுத்து ஆராயாமலேயே மனித இதயங்களுக்கும் மிருக இதயங்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமையைப் புரிந்துகொள்ள முடியும்' என்றான் லுங்கிக்காரன். அவர் முகம் உப்பு அரித்தது போல கருத்துப் போனது.

`நான் சொல்ல வருவது அறிவியல் ரீதியானது' என்றவர், அதற்கு மேல் பேச விரும்பாதவர் போல திமிங்கலத்தின் மார்பு பகுதியைச் சுட்டிக் காட்டி, சிதைத்துவிடக் கூடாது என்பதற்காக இதயம் இருக்கும் எனக் கணித்த இடத்தையும்விட கொஞ்சம் பெரிதாக வெட்டச் சொன்னார். அவர்கள் இருவரும் மாறிமாறி கோடரியைப் பயன்படுத்தி, ரத்தமும் சதையும் எலும்புமாக வெட்டிக்கொண்டே இருந்தார்கள். அப்போது,அதன் வயிற்றுப் பகுதியிலும் வெட்டு இறங்கி, குட்டி ஒன்று இருப்பது தெரிந்து, அதிர்ச்சியோடு கத்தினார்கள். அவர் எட்டித் தொட்டுப் பார்த்துவிட்டு, `இறந்து விட்டது. இதைக் கொஞ்சம் வேகமாக வெட்டுங்கள். நேரம் கடந்தால் எல்லாம் பாழாய்ப் போய்விடும்' என்றார். அவர்கள் ஒன்றும் கூறாமல்,வேகவேகமாக வெட்டி இதயத்தைத் துண்டித்தார்கள். குறித்த நேரத்தில் வருவதுபோல, சதுப்புநில நீர்வழி கரையில் படகு ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து படகோட்டி இறங்கி வந்தான். நான்கு பேருமாகச் சேர்ந்து இதயத்தைத் தூக்கினார்கள். அது பாறையைப்போல இருந்தது. நூற்றி எண்பது கிலோவுக்கும் குறையாமல் இருக்கும். அதை டிரம்மில் வைத்து, அப்படியே படகிலும் தூக்கி வைத்தார்கள். அவர் `ரொம்ப நன்றி' என்று அவர்களுக்குப் பணத்தை எடுத்து, கொடுக்கப் போனார். அவர்கள் வாங்க மறுத்து, படகு போவதைக் கூட கவனிக்காமல், திரும்பி வந்து, ஆளுக்கொரு பனைமட்டை கருக்கை எடுத்து வந்து, குட்டியை மட்டும் விட்டுவிட்டு, திமிங்கலத்தின் உடலை எப்படியெல்லாம் அறுக்க முடியுமோ அப்படியெல்லாம் அறுத்தெறிந்துவிட்டு காத்திருந்தார்கள். மூன்று மணி நேரம் கடந்திருக்கும். கடல் அலைகள் தொடர்ச்சியாகப் புரண்டு வந்து திமிங்கலத்தின் எலும்புக் கூட்டை உள்ளே இழுப்பதும் வெளியே தள்ளுவதுமாக இருந்தது. அப்போது அவர்கள் இருவரும் கூட்டுக்குள்ளாக இருந்த அந்தக் குட்டியைத் தட்டிக் கொடுத்து, `போ' என்று கத்தினார்கள். சட்டென என்ன நடந்தது எனத் தெரியவில்லை. அந்தக் குட்டி கூட்டுக்குள்ளிருந்து ஊர்ந்து வந்து, அப்படியே நகர்ந்துநகர்ந்து கடலுக்குள்ளாகப்போய்,கொஞ்சம் ஆழப் பகுதிக்குப் போனதும் கடலுக்கும் மேலாக துள்ளிக் குதித்து, நீந்திச் சென்றது. அது போவதையே அவர்கள் பார்த்துக்கொண்டு நின்றார்கள். அது அவர்களுக்கு நன்றி தெரிவிப்பதுபோல என்னவோ மீண்டும் ஒருமுறை மேலெழ துள்ளிக்குதித்து காட்டிவிட்டு சென்றுவிட்டது. அவர்கள் அவர்களுடைய பறவைகளையும் உண்டிகோலையும் எடுத்துக்கொண்டு சென்றார்கள். நானும்கூட எனக்கான வான்வழியை, சிறகுகளின் மூலம் அன்று கண்டுகொண்டேன்."

"உண்டிகோல் மனிதர்கள் இங்கேயே வந்துவிட்டார்கள். அவர்கள் உன்னையும் கொன்றுவிடுவார்கள். உன் குஞ்சுகளையும் கொன்றுவிடுவார்கள். வந்தால் வா. நான் போகிறேன்" என்று கருந்தலை மைனா பறந்து போனது.

கூட்டுக்குப் பறந்துபோய், மைனா அதன் இரண்டு குஞ்சுகளோடு உட்கார்ந்துகொண்டது. மூன்றுபேரும் கீழே நின்று, கைகளை வீசியும் உண்டிகோல்கள் மூலம் குறிபார்த்தும் அதை விரட்ட முயற்சித்தார்கள். அது அசராமல் அப்படியே உட்கார்ந்திருந்தது. ஒருவன் மரத்தின் மீதேறி, அதன் கூட்டுக்கு அருகில் வந்தான். அதுவரை தைரியமாக உட்கார்ந்திருந்தது, படபடத்து, கூட்டை விட்டு பறந்தது. அவன் கையில் வைத்திருந்த சிறிய தேனடைத் துண்டை, இரண்டு குஞ்சுகளின் அலகுகளுக்கு இடையிலும் சுவைக்க வைத்து, `நல்வரவு' என்றான்.

"த.அரவிந்தன்" <thavaram@gmail.com>

# வ. அதியமான் கவிதைகள்

**ஓவியம்: வான்கா**

## 1. மரப்பசு



ஓர் கணத்தில்
என்னை
வேர்விட்ட
விருட்சமாக்க துடிக்கிறது
இந்த
உச்சி வெய்யில்
மறு கணத்தில்
நிழல் சுரக்கும்
மரப்பசு
ஆகிறேன்
நான்
சிற்றெரும்புகளும்

வாய் வைத்து
உறிஞ்சும் அளவுக்கு
சிறியவைதான்
என் காம்புகள்

## 2. செல்லப் பிராணிகளை அவிழ்த்துவிடாதே

இசைக்கப்பட்டுக் கொண்டிருக்கும்
ஓர் பாடலின்
பரந்த முதுகின் மேலே
இன்னுமொரு பாடலை
இசைக்க விடு
இனி
அது
பாடல்கள் அல்ல
இசையும் அல்ல
வழித் தவறி
ஊருக்குள் நுழைந்துவிட்ட
புத்தம் புது
காட்டு விலங்கு

## 3. காம்பின் காதுகளில் பேசக் கற்றுக்கொள்ளுங்கள்

தான்
வாழ்ந்து
தீர்த்துவிட்டதாய்
தன்
வாய் திறந்து
சொன்ன பிறகுதான்
இலை ஒன்றினை
பறவை ஆக்குகிறது
கிளையின் காம்பு

## 4. கைவிடுதல்

ஒரு பிஞ்சுத் தொண்டை
முற்றி
தடிக்கும் காலங்களில்
சொர்க்கமும்
நரகமும்
தங்களை
இடம் மாற்றிக் கொள்கின்றன

## 5. நின்றெரிதல்

உங்கள்
கண்களுக்குத்தான்
ஒன்றாய்
கொட்டி வைக்கப்பட்டிருக்கின்றன
கோடி கோடி நட்சத்திரங்களும்

ஆனால்

பிரபஞ்சத்தின்
நாளிதுவரையில்
எந்த ஒரு நட்சத்திரத்திற்கும்
இன்னுமொரு நட்சத்திரம்
இந்த பிரபஞ்சத்தில்
இருக்கிறது
என்பதே தெரியாதாம்

அத்தனை
நட்சத்திரங்களிடமும்
தீர
விசாரித்துப் பார்த்துவிட்டேன்

## 6. இந்த பூமி தாங்குவதில்லை நாணத்தின் எடையை

கொஞ்சமும் தயக்கமில்லை
அடி ஆழத்து
மீன் குஞ்சு ஒன்றின்
சின்னஞ்சிறு
முதுகின் மீதுதான்
இத்தனை
ஒய்யாரமாய்
படுத்து
புரண்டு கொண்டிருக்கிறது
அத்தனை பெரிய
நீலக் கடல்

## 7. உங்கள் செவிகளை மேய்வதற்கு வரவில்லை குயிலின் குரல்

உங்கள்
ஒருவரின்
செவிகளையும்
மேயாத



குரல்
எனக்கு
அதனால்
என்னை
ஊமை
என்று
சொல்வீர்களா?

## 8. வாத்தியார்

விபத்தாய்
ஒரு முறை
ஒரு பல்
கீழ் உதட்டை கடித்து
சிறு காயம்
நேர்ந்துவிட்டது

அதன் பிறகு
ஒவ்வொரு முறையும்
அச்சிறு காயத்தின் மீதே
மிகத் துல்லியமாய்
பாய்ந்து
பாய்ந்து
கடித்துக் குதற வேண்டுமென
இத்தனை பெருங்கருணையோடு
இந்த முப்பத்திரண்டு
பற்களுக்கும்
பாடம் சொல்லிக் கொடுப்பது
யார்?

ஒரு வாய்க்குள்ளும்
இல்லவே இல்லாத
அந்த முப்பத்து மூன்றாவது
பல்லா?

## 9. மலர்களை எடை நிறுத்தும் கை எவனுக்குமில்லை

உடைந்த வானத்தை
எப்படி
எடை போட்டுக் கொண்டிருக்கிறாய்
பூக்கடைக்காரா?

வண்ணம்
வாசம்
மெருகு
மூன்று நாவுகளால்
ஒரு கணமும்
ஓயாது
வாயாடிக் கொண்டிருக்கும்
இன்றலர்ந்த
பூக்கள் தான்

தராசுத் தட்டில்
அள்ளி வைத்து
எடை நிறுத்தும்
கணங்களில்
மட்டும்
நிசப்தம்
நிசப்தம்
வானம் பிளக்கும்
நிசப்தம்

## 10. பேச்சுத் துணை

புதிய நட்புகள்
அமைய வாழ்த்துகள்
என் பணப்பையில்
மீதமிருக்கும்
கடைசி நாணயத்திற்கு
பேச்சுத் துணைக்கு
யாருமில்லை
என்பதால்
அதனை
இத்தனை விரைவாய்
செலவு செய்கிறேன்

**வ. அதியமான்** <vaadhiyamanrasan@gmail.com>

# எல்லாவற்றையும் சமமானதாக மாற்ற, நமக்கு இன்னும் 500 ஆண்டுகால கடுமையான போராட்டம் காத்திருக்கிறது!

## ஈவா ஹுசன்

## தமிழில்: ராம் முரளி

போர் நிகழும் நிலங்களிலும் சூழல்களிலும் பெண்களின் இருப்பு எத்தகைய அபாயங்களுக்கு உள்ளாகிறது என்பதையும் எத்தனையோ இழப்புகளுக்குப் பிறகும் தம்மை ஒடுக்கும் அதிகாரத் தரப்பினரைத் துணிச்சலுடன் எதிர்கொள்ளும் சில பெண் போராளிகளைப் பற்றியுமான உண்மைச் சம்பவங்களை மையமாகக்கொண்டு உருவாக்கப்பட்டிருக்கும் திரைப்படம் 'Girls of the Sun'. ஃபிரான்ஸை சேர்ந்த இயக்குநர் ஈவா ஹுசன் மத்திய கிழக்கில் உள்ள குர்திஸ்தான் நிலபரப்புக்குள் பயணம்செய்து, அங்கு நிலவும் பதற்றச் சூழல்களை இரண்டு ஆண்டுகள் களப்பணி செய்து, இத்திரைப்படத்தை உருவாக்கியிருக்கிறார். ஐ.எஸ்.ஐ.எஸ். தீவிரவாதிகளால் சிறைப்பிடிக்கப்படும் குர்து இனப் பெண்களின் துயரக் கதை இத்திரைப்படத்தின் மையமாக இருக்கிறது.

கணவனையும் தந்தையையும் பிள்ளைகளையும் பறிகொடுத்துவிட்டு, பாலியல்ரீதியாகச் சுரண்டப்படுதல், அடிமையாக விற்கப்படுதல் போன்ற பல்வேறு அவலங்களுக்கு அப்பெண்கள் உட்படுத்தப்படுகிறார்கள். உயிர் பிழைத்திருப்பதற்கான சாத்தியங்கள் குறுகிய அளவிலேயேஇருக்கும் அத்துயரச்சூழலைத் தமது அசாத்தியமான மனவலிமையால் எதிர்கொண்டு அவர்களிடம்இருந்துதப்பிப் பிழைக்கிறார்கள். பின்னர் தமது இருப்பைத் தக்கவைத்துக்கொள்ள ஆயுதமேந்தி அதே தீவிரவாதிகளுடன் உக்கிரமாகப் போர் புரிகிறார்கள். பாதிக்கப்பட்ட பெண்களின் எதிர் தாக்குதலை முதன்மைப்படுத்தும் இத்திரைப்படம் அத்தகைய போராட்டத்தில் அவர்கள் பங்கேற்க காரணமாக அமைந்த அவர்களுடைய உணர்வுப்பூர்வமாக முன்கதைகளையும் வலியுடன் நமக்கு கடத்திவிடுகிறது. 'பெண்கள் பலவீனமானவர்கள் அல்ல, தமது ஆற்றலை அவர்கள் முழுமையாக உணர்ந்து எல்லாவிதமான ஒடுக்குமுறைகளுக்கு எதிராகவும் கிளர்ந்து எழ வேண்டும்' எனச் சொல்லும் ஈவா ஹுசன் இத்திரைப்படத்தின் உருவாக்கப் பின்னணி குறித்து பகிர்ந்துகொண்ட நேர்காணலின் தமிழாக்கம் இது.



**உங்களுடைய ஒரு நேர்காணலில், உங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஃபாசிஸத்தால் பாதிக்கப்பட்டவர்கள் எனத் தெரிவித்திருக்கிறீர்கள். 'Girls of the Sun' திரைப்படத்தை இயக்க ஏன் தேர்வுசெய்தீர்கள்?**

ஸ்பெயினில் எனது தாத்தா தனது *16*ஆவது வயதில் ஃபாசிஸத்தை எதிர்த்து போராடுவதற்காக இராணுவத்தில் இணைந்தார். அவர் ஒரு ஸ்பானியர். அதோடு, அவரொரு கம்யூனிஸ்ட்டும் கூட. ஃபிரான்சுக்கு எதிராக *1939*இல் நடைபெற்ற போரில் குடியரசு கட்சியினர் தோல்வியுற்றதற்குப் பிறகு அவர் அந்நாட்டில் இருந்து வெளியேற்றப்பட்டார். அங்கிருந்து அவர் ஃபிரான்சுக்கு நடைவழியாகவே அழைத்துச் செல்லப்பட்டார். அதன்பிறகு, ஃபிரான்சில் இருந்த ஒரு வதைமுகாம்தான் அவருக்கான வாழ்விடமாக மாறியிருந்தது. இவையெல்லாம்எனதுகுடும்பத்தில்பெரும் அதிர்வுகளை ஏற்படுத்திய நிகழ்வுகளாகும். உங்கள் அகத்தில் இத்தகைய அழுத்தமான வரலாறு பொறிக்கப்பட்டிருக்கும்போது, உங்கள் கற்பனையிலும் சிந்தனையிலும்



பிற்காலத்தில் நீங்கள் செய்யும் காரியங்களிலும் அது மிகப் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தவே செய்கிறது. அதனால், எனது திரையுலகப் பயணத்தில் ஏதோவொரு புள்ளியில் ஸ்பானிய உள்நாட்டு யுத்தம் குறித்த ஒரு திரைப்படத்தை நிச்சயமாக உருவாக்குவேன் என்கிற உணர்வு எனக்கு எப்போதும் இருந்திருக்கிறது.

குர்து இன மக்களின் போராட்டம் குறித்து வாசித்துக் கொண்டிருந்தபோது, அங்கு பலவந்தமாகச் சிறைப்பிடிக்கப்பட்ட பெண்கள் அச்சிறைக்கூடங்களில் இருந்து தப்பித்ததும் பிறகு போராளிகளாக மாறியதும் எனக்கு மிகப் பெரிய ஆச்சர்யத்தையும் தாக்கத்தையும் ஒருங்கே உண்டாக்குவனவாக இருந்தன. ஏனெனில், அங்கு நிகழ்ந்திருந்தவை யாவும் நான் முன்பே அறிந்திருந்த ஸ்பானிய உள்நாட்டு யுத்தத்துடன் பல விதங்களிலும் ஒத்துபோவதாகவே இருந்தன. 1936இல் ஸ்பெயினில் என்ன நடந்ததோ அதனை நினைவூட்டுவதாகவே குர்து இன மக்களின் போராட்டம் எனக்குத் தோன்றியது. இதன்மூலம், குர்து இன மக்களது போராட்டம் எனக்குள் ஒருவிதத்திலான சகோதரத்துவத்தை உண்டாக்குவதாகவும் இருந்தது. தாங்கள் ஒடுக்கப்படுவதை ஏற்க முடியாமலும் பாதிக்கப்பட்டவர்களாக இருக்கும் நிலையை மறுதலித்தும் ஆயுதமேந்தி கிளர்ச்சியில் ஈடுபடத் துணிந்திருக்கும் இந்தப் பெண்கள் குறித்து தொடர்ந்து வாசித்தபோது இதுவொரு உலகளாவிய கதையாக எனக்குத் தோன்றியது. இது குர்து அல்லது யெஸிதி (Yezidi) அல்லது ஏதேனும் ஒரு குறிப்பிட்ட பகுதியைச் சேர்ந்த பெண்களுக்கு உரிய பிரச்சனை மட்டுமே அல்ல. இது உலகளாவிய பெண்களின் கதையைத் தெரிவிப்பதாக இருந்தது என்பதே இக்கதையை நான் சொல்லத் தேர்வுசெய்ய காரணமாகும்.

**ஸ்பானிய உள்நாட்டு யுத்தம் குறித்துத் தீவிரமான அறிதலைப் பெற்றிருக்கிறீர்கள். அது தொடர்பாக ஏதேனும் திரைக்கதை அமைத்திருக்கிறீர்களா?**

உண்மையில், எனது முதல் திரைக்கதையே ஸ்பானிய உள்நாட்டு யுத்தம் குறித்ததுதான். எனது தாத்தாவைப் போல யுத்தத்தின் முடிவில்

ஃபிரெஞ்சு வதைமுகாம்களில் அடைக்கப்படும் சில கதாபாத்திரங்களை மையப்படுத்தி முழு திரைக்கதையையும்நான்எழுதிநிறைவுசெய்திருந்தேன். ஆனால், 2007இல் இதைப் படமாக்க முயற்சி செய்தபோது அதைத் தயாரிப்பதில் யாருக்கும் ஆர்வமில்லைஎன்பதும்யாரும்இதைவிரும்பவில்லை என்பதும் எனக்குப் புரிந்தது. 'ஐரோப்பாவில் உள்ள வதை முகாம்களில் அடைக்கப்படுவதா, அதெல்லாம் இனி ஒருபோதும் உலகில் நடக்கச் சாத்தியமில்லை' என அவர்கள் கருதினார்கள். யாரும் அதைத்தயாரிக்க முன்வர மாட்டார்கள் என்பதால் என்னுடைய முதல் திரைப்படமாக அது இருக்காது என்கிற புரிதல் விரைவிலேயே எனக்கு வந்துவிட்டது. அதன்பிறகு குர்து மற்றும் யெஸிதி பெண்கள் குறித்துக் கேள்வியுற்றபோது அது முழுமையாகவே நான் நன்கு உணர்ந்திருக்கும் எனக்கு பரீட்சயமாகியிருக்கும் ஓர் உலகாக எனக்குக் காட்சியளித்தது. ஏனெனில், போர் குறித்தும் தங்களது சிந்தனைகளை முன்னிறுத்தி போரிட்டு தோல்வியுற்றவர்களைக் குறித்தும் நானொரு புத்தகம் எழுதியிருக்கிறேன். அதில் உள்ளவைதான் இப்போது குர்து சமூகத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அதுதொடர்பாக, சர்வதேசச்சமூகமும்ஐரோப்பாவும்நடந்துகொள்ளும் விதம் குறித்து முற்றிலுமாக வெட்கப்படுகிறேன். பணத்திற்கும் முதலாளித்துவத்திற்கும் குறுகிய கால நோக்கங்களுக்கும் அவை தன்னை ஒப்புக்கொடுத்து விட்டிருக்கின்றன. இச்செயல்பாடுகள் நம் அனைவருக்கும் மீளாத் துயரத்தையே உண்டுபண்ணியிருக்கிறது.

**'Bang Gang' எனும் உங்கள் முதல் திரைப்படத்தைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பாலியல் தொடர்பான செயல்களை ஒழுங்கமைக்கும் ஸ்விங்கிங் கிளப்பைத் தொடங்கத் தீர்மானிக்கும் சில ஃபிரெஞ்சு இளைஞர்களைப் பற்றியது அத்திரைப்படம். முற்றிலும் வித்தியாசமான அத்தகைதொரு கதைக்களத்தை இக்காலத்தில் இயக்குவதற்கு நீங்கள் தேர்வு செய்ததன் காரணம் என்ன?**

அரசியல் சூழலில் நிலவிய வெறுமைதான் காரணமாக இருந்திருக்கும் எனக் கருதுகிறேன். முதலில், இக்கதையின் உண்மைப் பின்னணியை 2000-2001ஆம் ஆண்டில் எனது 20ஆவது வயதில் கேள்வியுற்றேன். அப்போது எனக்குள் அது சில அதிர்வுகளை உண்டாக்கியது. 2009இல் இதற்கான திரைக்கதையை எழுதத் தொடங்கியபோது எனது இளமைப் பருவத்தில் இருந்து வெளியேறிக் கொண்டிருந்தேன். அது என்னை அரசியல் களத்தில் நிலவும் வெற்றிடத்தைக் குறித்தும் இலட்சியங்களே இல்லாதஇன்றைய சூழல்குறித்தும்யோசிக்கச்செய்தது. இத்திரைப்படம் அவை குறித்து உரையாடுவதே ஆகும். அது வெறுமனே புணர்ச்சியைப் பற்றியது மட்டுமே அல்ல. புணர்ச்சி என்பது எப்போதுமே உடல் கிளர்ச்சியையும் கடந்து வேறு சிலவற்றையும் உள்ளடக்கியதாகவே இருக்கிறது. அதன்பிறகு, Girls of the Sun திரைப்படத்தை இயக்குவதற்கான உரிய நேரம் வந்திருப்பதாக தோன்றவே அதன் பணிகளில் செயல்படலானேன்.

**இவ்விரு திரைப்படங்களின் கருபொருளும் முற்றிலும் வேறு வேறானவை. என்றாலும், இரண்டுமே பெண் மையத் திரைப்படங்கள் என்பதால் இவற்றுக்கிடையிலே ஏதேனும் ஒப்புமைகள் இருப்பதாக நினைக்கிறீர்களா?**

திரையில் பெண்களாகிய நாங்கள் மிகக் குறைவாகவே முன்னிலைப்படுத்தப்படுகிறோம். இது நிஜ வாழ்க்கையில் பெண்கள் தங்களை எப்படி உணர்கிறார்கள் என்பதில் மிகப் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியிருப்பதாகக் கருதுகிறேன். பெண் கதாபாத்திரங்கள் அனைத்தும் பின்னணியில் அமிழ்ந்திருக்க.. வெகு சாதாரண நிகழ்வுகளில் கூட திரைப்படங்களில் ஆண்களுக்கு மட்டுமே முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. பிரதிநிதித்துவம் குறித்து பேசுகின்ற இடங்களிலும் பெரும்பாலும் ஆண்கள் மட்டுமே பங்குபெறுகிறார்கள். இது பெண்கள் மத்தியில் நம்பிக்கையற்றத் தன்மையை வளர்ப்பதாகவே உணர்கிறேன். நமது முக்கியத்துவத்தை நாம் அறிந்திருப்பதில்லை. வரலாற்றில் எங்குமே எங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை. அதனால், பிரதிநிதித்துவம் எனும் ஒரு பெருஞ் சுவரில் என் கையில் கிடைத்திருக்கும் சிறிய செங்கல் ஒன்றைப் பொருத்த முயற்சித்திருக்கிறேன். இதுவொரு கூட்டழைப்புதான். தடைகளைக்கடந்து பல பெண்கள் முன்வந்து தமது கதைகளை வெளிச்சத்திற்குக் கொண்டுவர வேண்டும், தங்களுக்கான இடங்களைக் கைப்பற்ற வேண்டும் என்பது எனது பெரு விருப்பம். அதில் பங்குகொள்வதே முக்கியமானது. பிரதிநிதித்துவம் பல்குரல்களை உள்ளடக்கியதாக மாறும்போதுதான் அதன் ஒற்றைத்தன்மை குறையத் தொடங்கும்.

**யெஸிதி பெண்களையும் போராளிகளையும் எப்படி அறிந்துகொண்டீர்கள்?**

குர்து இனப் பெண்களைப் பற்றி முன்பே எனக்குச் சிறிதளவில் தெரியும். என்றாலும், நான் அடிப்படையில் ஃபிரெஞ்சு தேசத்தவள் என்பதால் எனது அறிதல் வரையறைக்குட்பட்டதாகவே இருந்தது. அதனால், முடிந்த வரையில் மேலும் தீவிரமாக அவர்களைக் குறித்து வாசித்தறிவதில் எனது மிகுதியான நேரத்தைச் செலவிட்டேன். ஒருவிதத்தில் இதுதான் அவர்களுடனான எனது முதல் தொடர்பு என்று சொல்லலாம். ஏராளமான புத்தகங்களைத் தொடர்ச்சியாக வாசித்துக்கொண்டிருந்தேன். யெஸிதி பெண்கள் குறித்த புத்தகங்களையும் வாசித்தேன். அதன்பிறகு, குர்திஸ்தானுக்கும் எர்பில்லுக்கும் டூஹொக்குக்கும் மஹ்மோருக்கும் ஷாரியாவில் இருந்த


Girls of the son

அகதிகள் முகாமிற்கும் பல்வேறு சந்தர்ப்பங்களில் நான் நேரடியாகச் சென்றேன். சிறைப்பிடிப்பில் இருந்து தப்பி வந்திருந்த பல பெண்களை இந்தப் பயணங்களில் சந்தித்தேன். அவர்களுடன் உரையாடி அவர்களது அனுபவங்களைப் பதிவு செய்துகொண்டேன். யெஸிதி இனத்தவர்கள் வலுவாகக் காலூன்றியிருக்கும் ஜெர்மனிக்கும் பிரான்சுக்கும் கூட சென்று அங்கு வசித்துவரும் அம்மக்களையும் சந்தித்தேன். அவர்களிடமிருந்தும் பல தகவல்களையும் போர் குறிப்புகளையும் பெற்று திரும்பியதும் அவை அனைத்தும் முழுமையாக எனது பணியிடத்தில் அமர்ந்து ஆய்வுசெய்தேன். இப்படித்தான் அவர்களுடனான தொடர்பை வளர்த்துக்கொண்டேன்.

**ஏன் கோல்ஷிஃப்தே ஃப்ராஹானியை (Golshifteh Farahani) முதன்மைக் கதாபாத்திரத்திற்குத் தேர்வுசெய்தீர்கள்? குர்து அல்லது யெஸிதி பெண்ணைக்கூட நீங்கள் தேர்வுசெய்திருக்கலாமே?**

நேர்மையாக உங்கள் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமென்றால், இந்தத் திரைப்படத்தைச் சாத்தியமாக்கக்கூடிய ஒரு பெண் நடிகையைக் கண்டடைவது மிகச் சிரமமானதாகவே இருந்தது. திரைத்துறை எப்படிச் செயல்படுகிறது என்று பலரும் அறிந்திருக்க மாட்டார்கள். திரைப்படம் உருவாக்கபெருமளவிலான பணம் தேவைப்படுகிறது. அதனால், மக்களோ நிதி வழங்குநர்களோ அறிந்திருக்காத ஒரு நடிகரைத் தேர்வுசெய்தால் பண உதவியைப் பெறுவது மிகச் சிரமமான பணியாக மாறிவிடும். ஃபிரான்சில் வாழும் கோல்ஷிஃப்தே ஃப்ராஹானியால்தான் இந்த இடைவெளியை நிரப்ப முடிந்தது. அவர் இல்லாமல் இந்தத் திரைப்படம் உருவாகியிருக்க சாத்தியமே இல்லை. ஹனீர் சலீம் (Huner Saleem) போன்ற அற்புதமான சில குர்து இயக்குனர்களே கோல்ஷிஃப்தே ஃப்ராஹானியின் நடிப்பாற்றலை அங்கீகரித்து அவரை குர்து மொழித் திரைப்படங்களில் நடிக்கச் செய்திருக்கிறார்கள். அதனால், அவருடைய நடிப்புத் திறன் குறித்தோ அவர் இந்தக் கதாபாத்திரத்திற்குப் பொருந்துவாரா என்பது குறித்தோ சந்தேகம் கொள்வதற்கு எனக்கு எவ்விதமான அவசியமும் ஏற்படவில்லை.

**தற்போதும் நிகழ்ந்துகொண்டிருக்கும் ஒரு கதையை உங்கள் திரைப்படத்தில் சொல்லியிருக்கிறீர்கள். யெஸிதி பெண்களையோ போராளிகளையோ பற்றி பேசும்போது அவர்களைக் குறிக்கும் அடையாளச் சின்னங்களை நீங்கள் மாற்றிவிட்டீர்கள். பெஷ்மெர்காவின் சின்னங்களையும் என்னால் திரைப்படத்தில் பார்க்க முடியவில்லை; அதேப்போல குர்திஸ்தானில் உள்ள நிலங்களின் பெயர்களையும் படத்தில் நீங்கள் தவிர்த்துவிட்டிருக்கிறீர்கள், இதற்கான காரணம் என்ன?**

குர்திஸ்தானுக்கு நான் சென்றபோது, 1936க்கும் 1939க்கும் இடைப்பட்ட காலத்தில் ஸ்பெயினில் என்ன நிகழ்ந்ததோ அதற்கு ஒத்ததாகவே அங்கும்

நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்கிற எண்ணம் மீண்டும் மீண்டும் எனக்குள் எழுந்தபடியே இருந்தது என்பதை முன்பே குறிப்பிட்டேன். ஸ்பெயினில் அப்போது பல குழுக்கள் செயல்பட்டுக் கொண்டிருந்தன. அவர்களுக்கு இடையிலான முரண்களும் அடர்த்தியாகவே இருந்தது. அவற்றை முழுமையாக உணர்ந்துகொள்வது மிகச் சிரமமானது என்கிற புரிதல் எனக்கு உள்ளது. எனது தாத்தா ஒரு கம்யூனிஸ்ட், எனது மாமா ஓர் அனார்கிஸ்ட். அதுவொரு சிக்கலான சூழலாகத்தான் இருந்தது. அதனால், முதலில் இந்தப் படத்தை உருவாக்கும் முறைகளைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தபோது நிஜமான அடையாளச் சின்னங்களையோ சீருடைகளையோ தவிர்க்க வேண்டும் என்று தொடக்கத்திலேயே முடிவுசெய்துவிட்டேன். அதோடு, ஒருவேளை உண்மைத்தன்மைக்காக அசலான உடைகளை மாதிரிகளாகக் கொண்டு சீருடைகளை வடிவமைக்க முடிவுசெய்திருந்தாலும்கூட, அவற்றைத் தயார் செய்வதற்குத் தேவையான பணம் எங்களிடம் இல்லை என்பதையும் நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். படத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கும் சீருடைகள் அனைத்தும் கடன் மூலமாகக் கொணரப்பட்டவையே.

இந்தப் போராட்டங்களின் சூழல் குறித்த உணர்வை ஆழ்தளத்தில் கட்டமைத்துவிட்டு, ஒரு புனைவார்த்தமான உலகைத் திரைப்படத்தில் உருவாக்கும்போது நாங்கள் ஏதேனும் ஒரு குறிப்பிட்ட குழுவுக்கு மட்டுமே ஆதரவாக அதனை உருவாக்கியிருப்பதாக யாராலும் எங்களைக் குற்றம்சாட்ட முடியாது. இந்தத் திரைப்படத்தை உருவாக்க எனது முதன்மை நோக்கமாக இருந்தது பெண்கள்தான். யெஸிதி பெண்கள் குறித்தும் அதன் மக்கள் குறித்தும் காட்சியமைக்கும்போது என்னால் இயன்ற வரையில் விவேகமான ஒரு முறைமையைக் கையாள வேண்டும் என்பது எனது தீர்மானமாக இருந்தது. ஏனெனில் நான் அந்நிலத்திற்குச் சென்று அங்கிருந்த போராளிகளிடம் உரையாடியபோது, அவர்களும் அத்தகைய ஒரு விவேகமான அணுகுமுறையையே எனது திரையாக்கத்தில் எதிர்பார்த்தார்கள். முழுமையாகவும் நேரிடையாகவும் அவர்கள் வெளிப்படுத்தப்படுவதை அவர்கள் விரும்பவில்லை. அந்த உணர்வை நான் மதிக்கிறேன். அதனால் என்னுடைய அணுகுமுறை அவர்களை எவ்விதத்திலும் காயப்படுத்திவிடக்கூடாது என்பதில் உறுதியாக இருந்தேன். உண்மைக்கு நெருக்கமாக இருக்கிறேன் எனச் சொல்லி, அவர்களையும் என் மீது அவர்கள் கொண்ட நம்பிக்கையையும் அர்த்தமற்றதாக மாற்றிவிடக்கூடாதல்லவா?!. அந்த வகையில், கலாச்சார ரீதியாக நான் சில பிழைகளைச் செய்திருப்பினும் நான் முன்வைக்க விரும்பிய கருத்துகளில் நான் சமரசம் செய்துகொள்ளவில்லை. திரைப்படத்தில் காட்டப்பட்டிருக்கும் உலகையும் புவியியல்ரீதியாக இந்தச் சிக்கல்கள் எங்கு நடக்கின்றன என்பதையும் பற்றிய புரிதலைப் பெற்றிருப்பவர்களால் இதில் உள்ள மக்களும் பெண்களும் யார் என்பதை எவ்விதச் சிரமமுமின்றி மிக வெளிப்படையாகவே புரிந்துகொள்வார்கள். குறிப்பிட்டு அதைச் சொல்வதை விடவும் சாரம்சப்படுத்த வேண்டும் என்பதுதான் எனது நோக்கமும்கூட.

முதன்மைக் கதாபாத்திரத்தை அத்தனை தீவிரமாக இயங்கச் செய்யும் உந்துவிசை என்ன?

தலைமைப் பொறுப்பு வகிக்கும் ஒரு முதன்மைக் கதாபாத்திரம் படத்தில் தாழ்மையாகவும் சக மனிதர்களிடம் அன்பாகவும் நடந்துகொள்வதை நாம் அரிதாகவே பார்க்கிறோம். இக்கருத்தினால், அவள் தானொரு பெண் எனும் நிலையைத் தொடர்ச்சியாகத் திரைப்படத்தில் வலியுறுத்தி அதன்மூலமாக, இரக்கத்தை கோருகிறாள் என்று நீங்கள் நினைத்துவிடக்கூடாது. படத்தில் அப்படி நிகழ்வதில்லை. ஆண் - பெண் சமத்துவம் குறித்துப் பேசும் அதிகச் சுவாரஸ்யமூட்டும் சூழல்களை என்னால் நிறையவே பார்க்க முடிகிறது. சிக்கலைத் தட்டையானதாக மாற்றவே இத்தகைய அவசரத்தன்மையிலான அணுகுமுறைகள் முயல்கின்றன. எனது திரைப்படத்தில், பங்குகொண்டிருக்கும் பெண்களுக்குப் பதவிகளை வகிப்பதற்கும் அதிகாரத்தில் இருப்பதற்குமான வாய்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது. இது பாரம்பரியமாகப் பெண்நிலை என்னவாக இருந்தது என்பதைப் பற்றியதல்ல. அவர்கள் முன்னுள்ள தடைச் சுவர்களை உடைப்பது குறித்தது. நிஜத்தில் தலைமைப் பொறுப்பில் இருந்த பெண் ஒருவர் எழுதிய உரையில் இருந்து உந்துதல் பெற்று இத்திரைப்படத்தில் ஒரு காட்சி வைக்கப்பட்டிருக்கிறது. "இங்கு உங்கள் இருத்தலே வெற்றியைச் சுட்டுவதுதான்" என அந்தப் பெண் குறிப்பிடுகிறார். இதுபோன்ற தன்மையை நாம் பெண்களிடத்தில் அரிதாகவே பார்க்கிறோம். அதாவது, இதுபோன்ற தலைமைத்துவத்தைப் பற்றி குறிப்பிடுகிறேன். பெண்களின் இத்தன்மையைக் காட்டுவதற்கான மிகப் பெரிய வாய்ப்பாக அந்தத் தருணத்தை கருதினேன்.

பெண்களான நாம் பல இன்னல்களை அனுபவிக்கிறோம் என்றாலும், அவையெல்லாம் பெரியளவில் எங்கும் விளக்கப்பட்டிருக்கவில்லை. இந்தத் தலைமுறையைச் சேர்ந்த திரைப்பட இயக்குனர்களிடத்தில் இத்தன்மை மாறத் தொடங்கியிருப்பதற்கு அவர்களுக்கு நன்றி தெரிவிக்க விரும்புகிறேன். நான் எப்படி வளர்க்கப்பட்டேன் என்பதும் பெண்ணின் பார்வையில் இப்போது வரை அனைத்தும் எப்படிப் பார்க்கப்படுகிறது என்பதும் சமூகம் அவர்களிடத்தில் என்ன எதிர்பார்க்கிறது என்பதுடன் தொடர்புடையது. பெண்களுக்கான வரையறைக்குள் அவர்களை அமுக்கச் செய்யும் முயற்சியாகவே அது இருக்கிறது.

இந்தத் திரைப்படத்தில் இருந்து



Girls of the son

பார்வையாளர்கள் எத்தகையை உணர்வைச் சுமந்துசெல்ல வேண்டும் எனக் கருதுகிறீர்கள்?

பெண்கள் பாதிக்கப்பட்டவர்கள் அல்ல; அவர்கள் வலிமையானவர்கள், போராளிகள். பெண்கள் ஒருபோதும் இதுகுறித்து ஐயம்கொள்ளக்கூடாது. திரையிடல் முடிந்ததற்குப் பிறகு என்னைச் சந்தித்த சில பெண்கள் திரையில் பெண்களை வலிமையானவர்களாகக் காட்சிப்படுத்தப்பட்டிருப்பது தங்களுக்கு எத்தகைய பலத்தைக் கொடுத்தது எனத் தெரிவித்தார்கள். புனைவுகளில் பெண்களுக்குக் குறைவான முக்கியத்துவமே அளிக்கப்படுவதால், அவர்களுடைய உலகத்தையே நாம் மெல்ல மெல்ல நமது நினைவுகளில் இருந்து தொலைத்துவருகிறோம். அதனால், இப்படி அழிக்கப்பட்ட நினைவுகளுக்கு எதிராகப் பெண்கள் மீண்டும் தாங்கள் வலிமையானவர்கள்தான் என்பதை உணர்வதற்கான செயல்முறையில் இறங்க வேண்டும். திரையில் வலிமையான பெண்களைப் பார்க்கும்போது அது தன்னியல்பாக உங்களையும் பலமிக்கவராக உணரச்செய்துவிடுகிறது. அவ்வுணர்வு ஏற்கெனவே உங்களுக்குள் இருக்கும் அகப் பலத்தின் விழிப்புநிலையாகவே இருக்கிறது.

ஓர் ஆண் இயக்குநருக்கு இத்திரைப்படத்தை உருவாக்கக் கிடைக்கும் பணத்தில் மூன்றில் ஒரு பங்குதான் உங்களுக்குக் கிடைத்ததாக ஓரிடத்தில் குறிப்பிட்டிருந்தீர்கள். திரையுலகில் நீங்கள் எதிர்கொண்ட தடைகள் என்னென்ன?

உங்களை எப்போதும் குறைவாகவே மதிப்பிடுவார்கள். ஓர் ஆணை விட இருமடங்கு உங்களை நீங்கள் நிரூபிக்கப் போராட வேண்டியிருக்கும். இது சோர்வும் அவநம்பிக்கையும் அளிக்கக்கூடிய ஒரு போராட்டமாகும். பெண்களாக நாங்கள் எல்லா நேரங்களிலும் அவநம்பிக்கைக்குள் தள்ளப்படும் நிலையிலேயே இருக்கிறோம். சில நேரங்களில் அது அதீதக் கோபத்தைக் கிளர்த்துவதாகவும் இருக்கிறது. இந்தக் கோபத்தை நமது செயலூக்கத்திற்கான ஆற்றலாக மாற்றிக்கொண்டால் தவிர நமக்கு வேறு வழி இருக்கப்போவதில்லை. நான் எதிர்கொண்ட சிரமங்களைப் பற்றி சொல்ல வேண்டுமானால், போர் மையத் திரைப்படத்தை ஒரு பெண்ணால் உருவாக்க முடியாது என்று நிதியளிப்பாளர்கள் பின்வாங்கினார்கள். போர் திரைப்படங்களை இயக்குவது தொடர்பான ஆண்களுடைய திறனை ஒருபோதும் யாரும் சந்தேகிப்பதில்லை. பொதுவாகச் சொல்ல வேண்டுமென்றால்: கவனமாக இருங்கள், ஆணாதிக்கத்தின் நடைமுறை இயல்புகள் உங்களைச் சிதைத்து நிர்மூலமாக்க ஒருபோதும் அனுமதிக்காதீர்கள். எப்போதும் தலைநிமிர்ந்து நில்லுங்கள், உங்கள் மீது நம்பிக்கை வையுங்கள். ஒரு பெண் என்பதால் சமூகம் உங்களுக்கு இந்த இயல்புகளை வழங்காது என்றாலும் தீரத்துடன் அதைக் கைக்கொள்ளுங்கள். இத்தனை ஆண்டு போராட்டத்திற்குப் பிறகு, இப்போது இந்த அமைப்புமுறையின் இறுக்கம் சற்றே தளர்ச்சியுறத் தொடங்கியிருக்கிறது. ஆனால், இதுமட்டுமே போதாது. பெரும்பாறையைச் சிறு உளியால் உடைக்கத் தொடங்கியிருக்கும் தொடக்கச் செயல்பாடு மட்டுமே இது எனக் கருத வேண்டும். நான் நினைக்கிறேன், எல்லாவற்றையும் சமமானதாக மாற்ற, நமக்கு இன்னும் 500 ஆண்டுகால கடுமையான போராட்டம் காத்திருக்கிறது.

ராம் முரளி <raammurali@gmail.com>

# 'நீர்வழிப் படூஉம்'மும் இன்ன பிறவும்...

இளங்கோ

காலங்காலமாக மனிதர்கள் வீட்டை விட்டு குடும்பத்தை விட்டு, ஓடிப் போகின்றவர்களாகஇருந்திருக்கின்றார்கள். ஆதியிலே புத்தரும் இப்படி தன் மாளிகையை விட்டு எவருக்குந் தெரியாமல் சென்றிருக்கின்றார். வீட்டை விட்டு என்றென்றைக்குமாக நீங்குவதற்கு ஒவ்வொருவருக்கும் பல்வேறு அக/புறக் காரணங்கள் இருந்திருக்கின்றன. ஈழப் போராட்டத்தில் இப்படி பலர் போராட்ட இயக்கங்களில் இணைவதற்காய், குடும்பத்திடம் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப்போயிருக்கின்றனர். அவ்வாறானவர்களில் பலர் மீண்டும் வீடடையாமல் இடைநடுவில் அகால மரணமும் அடைந்திருக்கின்றனர்.

அதுபோலவே தம் மன விடுதலைக்கென, தமக்குப் பிடிக்காத குடும்ப வாழ்க்கையிலிருந்து விலகிச் செல்லவென பலர் வீட்டை விட்டு நீங்கியிருக்கின்றார்கள். சமகாலத்தில் இப்படி வீட்டை விட்டு ஓடிப்போகின்றவர்களைப் பற்றி நிறையப் புனைவுகளை எழுதிய ஒருவராக இமையத்தைச் சொல்லலாம். எம். கோபாலகிருஷ்ணனின் 'தீர்த்த யாத்திரை', ஒருவன் தன் தேடலுக்காய் வீட்டை விட்டு விலகிச் செல்கின்றவனாக இருந்தபோதும், கோபாலகிருஷ்ணனின் முதன்மையான படைப்புக்களில் ஒன்றாக அதை வைக்கமுடியாது. அதேவேளை பல வருடங்களுக்கு முன் காசிக்கு ஓடிப்போன ஒரு பெண்ணைத் தேடி, அவள் இறந்துபோனபின் பின்னோக்கிப் பார்க்கின்ற பா.வெங்கடேசனின் 'வாராணசி'யில் இந்த ஓடிப்போதல் கச்சிதமாகக் கையாளப்பட்டிருக்கின்றது.



இவ்வாறான 'ஓடிப்போதல்' தேவிபாரதியின் 'நீர்வழிப் படூஉம்' நாவலிலும் நிகழ்கின்றது. ஆனால், அது முக்கிய பேசுபொருளாக இல்லை. அதேவேளை அந்த ஓடிப்போதல் நிகழும்போது, ஓடிப்போனவரைப் பின் தொடராது, அவ்வாறு ஓடிப்போனவரால் குடும்பத்தில் இருக்கும் ஒருவருக்கு என்ன நிகழ்கின்றது என்பதை நுட்பமாக அலசுகின்றது.

நாவிதத் தொழில் செய்யும் காருமாமாதான் இங்கே முதன்மைப் பாத்திரம். காருமாமாவின் மரணத்தோடு தொடங்கும் நாவல் அவரின் மரணம் முடிந்து எட்டாம் நாள் 'தாலியறுப்புச் சடங்கோடு முடிவடைந்து விடுகின்றது. அந்த எட்டோ / பத்தோ நாட்களில் காருமாமாவின் வாழ்க்கை பற்றி மட்டுமில்லை, அவரோடு சம்பந்தப்பட்ட பலரது கதைகளும் இப்புதினத்தில் சொல்லப்படுகின்றன.

மனிதர்களுக்கு கலை, இலக்கியம் எதற்கு அவசியமெனயோசிக்கும்போது, முதன்மையாக அது ஒருவர் வாழவோ கற்பனை செய்யவோ முடியாத பிறிதான வாழ்க்கை முறைகளை அறிமுகப்படுத்துவதென்று நான் எண்ணிக் கொள்வதுண்டு. மேலும் அதிகாரப் பெரும்பரப்பில் விலத்தப்பட்ட உதிரிகளாக / கவனிக்கப்படாத உயிரிகளான மனிதர்களை, அவர்களுக்கும் வாழ்விருக்கின்றது, அவர்களுக்கென்று கொண்டாட்டங்களும் சரிவுகளும் இருக்கின்றதென்று நம் முன்னே கலை நிகழ்த்திக் காட்டுக்கின்றது. அண்மையில் அலிஸ் வாக்கரின் Colour Purpleஐ தியேட்டரில் பார்த்தபோது, அலிஸ் அன்று



தேவிபாரதி

அதை எழுதிப் பதிவாக்காவிட்டால் பல்வேறு வகையில் ஒடுக்கப்பட்ட மனிதர்களாயிருந்த கறுப்பினத்தவர்களின் திமிர்தெழுதல்களும் கொண்டாட்டங்களும் நமக்கு ஒருபோதும் தெரிந்திராதென்றே ஒவ்வொரு காட்சிகளிலும் எண்ணிக் கொண்டிருந்தேன். அவ்வாறே தேவிபாரதியின் 'நீர்வழிப் படூஉம்'மில் விளிம்பு நிலையாக்கப்பட்ட நாவிதக்குடும்பங்களில் ஊடாடிக் கொண்டிருந்த அற்புதமான வாழ்வு விரித்து வைக்கப்பட்டிருக்கின்றது.

நான் வாசிக்க வந்த 2000களின் தொடக்கத்தில், அப்போது வாசிக்க முடிந்த பெருமாள் முருகனின் 'கூளமாதாரி'யும் சோ.தர்மனின் 'கூகை'யும் கண்மணி குணசேகரனின் 'கோரை'யும் ஏன் இன்னும் மறக்க முடியாதநாவல்களாய்எனக்குள் தங்கியிருக்கின்றதென யோசிக்கும்போது, அவை எனக்கு அறிமுகமற்ற கதைப் பரப்புக்களை மட்டுமில்லை, அந்த கதையில் உலாவும் மனிதர்களை அவ்வளவு பரந்த தளத்தில் மனதில் தங்கும்படியாக விபரிக்கச் செய்ததும் முக்கிய காரணமென நினைக்கின்றேன். இன்றைக்கு எழுதப்படும் பெரும்பாலான நாவல்களில் இந்தப் புள்ளிகள் தவறவிடப்படுவதால் அவை மட்டுப்படுத்தப்பட்ட வாசிப்பு மன எல்லைக்குள் மட்டும் நின்றுவிடுகின்றன.

'நீர்வழிப் படூஉம்' நான் முன்னே குறிப்பிட்ட நாவல்களின் வழி வந்துசேரக் கூடியதொன்றாகும். 'கூளமாதாரி'யில் வரும் சிறுவன் பாத்திரம் போல ஒருவனான கதை சொல்லியாலே இந்நாவலின் கதை பெரும்பாலும் சொல்லப்படுகின்றது. காருமாமாவின் மரணத்தின்போது அவன் திருமணத்துக்கு தயாராகிவிட்ட இருபதுகளில் இருக்கக்கூடிய ஓர் இளைஞன். ஆனால், நனவிடை தோய்தல் முழுதும் அவன் சிறுவனாக இருப்பதிலேயே சொல்லப்படுகின்றது. இந்த நாவலின் கதை, எங்கு வாழ்ந்தாலும் உறவுகளுக்கு இடையிலும் / கூட்டுக் குடும்பங்களில் நடுவிலும் நிகழக்கூடியதுதான். ஆனால், காருமாமா, பெரியம்மா, அம்மா, ராசம்மா அத்தை என்பவர்களைப் பற்றிச் சொல்ல தேவிபாரதியால் மட்டுமே முடியும். ஏனென்றால் அது அவருக்கு மட்டுமே நன்கு பரிட்சயமான வாழ்க்கை. அதை நம்மால் வாழ மட்டுமில்லை, கற்பனை செய்யவும் முடியாது. அவ்வாறு நாம் வாழவும் கற்பனை செய்யவும் முடியாத வாழ்வையும் மனிதர்களையும் நமக்கு நினைவூட்டத்தான் எழுத்துத் தேவையாகின்றது.

எந்த மிகச் சிறந்த நாவல்களாயினும் அதில் விடுபடுதல்கள் இருக்கும். அவ்வாறான குறைகள்தான் ஒரு நாவலை முழுமைபடுத்துகின்றதென நம்புகின்றவன் நான்.. இங்கே நாவிதர்கள், அவர்கள் சென்று தொழில் செய்யும் ஆதிக்கச் சாதியினர் குறைகளற்றே விபரிக்கப்பட்டிருக்கின்றனர். சிலவேளைகளில் தேவிபாரதி ஆதிக்கசாதிகள் அது எங்கு இருப்பினும் எவ்வாறு ஒடுக்கும் என்பது நமக்குத் 'தெரிந்த கதை'தானேயென அதை விலத்திச் சென்றிருக்கலாம். 'Colour Purple கறுப்பின மக்களின் வாழ்வைச் சொல்லிக் கொண்டிருக்கும்போது ஓரிடத்தில் சட்டென்று விலத்தி கறுப்புப் பெண் தனது காருக்குப் பெற்றோல் அடிக்கும் இடத்தைக் காட்டும். அங்கே அந்தப் பெண்ணைச் சந்திக்கும் வெள்ளையினப் பெண் இந்தக் கறுப்புப் பெண்ணை தங்கள் வீட்டுக்கு வேலைக்கு வாவென்று அதே அடிமை மனோபாவத்துடன் அழைப்பார். இந்தக் கறுப்புப் பெண்ணோ ஏன் அங்கே வேலைக்கு வரவேண்டுமென வாய்காட்டுவாள். அது மட்டுமே அவள் செய்த ஒரே குற்றம். வசதி வாய்ப்புக்களில் எவ்வளவு முன்னேறினாலும் வெள்ளையினத்தவர்களுக்கு அன்று கறுப்பர்கள் அடிமைகள்தான்.




அந்த சிறு எதிர்ப்புக்காய் அந்தக் கறுப்புப் பெண், கணவர் பிள்ளைகள் முன்னால் பொலிஸால் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்படுவாள். அவள் மாதக்கணக்கில், திருப்பி 'வாய்காட்டி'யதற்காய் தண்டனைக்குள்ளாக்கப்படுவதுமட்டுமில்லை,அந்தத் தண்டனை முடிந்தபின்னும் அதே வெள்ளையினப் பெண்மணியின் வீட்டில் வேலை செய்வதற்காக அழைத்துச் செல்லப்படுவாள். இவையனைத்தையும் அவளின் கணவர் / பிள்ளைகளால் எதுவுமே செய்யமுடியாது, வேதனையுடன் பார்த்துக் கொள்ளவே முடிகின்றது. அவ்வளவுதான் இத்திரைப்படத்தில் வரும் வெள்ளையினத்தவர் சம்பந்தப்படும் காட்சி. ஆனால், படம் முழுவதும் அந்தப் பெண் செய்த குற்றந்தான் என்ன என்று நம் மனதை ஆழமாகப் பாதிக்கும் விடயமாக அது இருக்கும். இப்படியான ஆதிக்கசாதி மனோபாவத்தின் சுவடெதுவும் இன்றி, தேவிபாரதி ஒடுக்கப்பட்ட சமூகமொன்றின் வாழ்வைப் பற்றி எழுதியதற்கு படைப்பாளியாக அவருக்கும் ஏதேனும் ஒரு காரணம் இருக்கவும் கூடும். ஆனால், இற்றைக்கும் சாதிய சமூகமாகவே தமிழ்மனம் தன் ஒவ்வொரு செயற்பாட்டிலும் நிரூபிக்கத் துடித்துக் கொண்டிருக்கும்போது 'இந்த விடுபடல்' ஒரு நெருடலாகவே வாசிக்கும் மனதுக்கு இருக்கும்.

ஆனால், இதன் நிமித்தம் 'நீர்வழிப் படூஉம்' தன் சிறப்பை இழக்கப் போவதில்லை. அது தன்னளவிலே ஒரு முழுமையான நாவல்தான். ஒரு படைப்பை வாசிக்கும்போது வாசிப்புமனம் அதற்கு நிகரான ஏற்கனவே எழுதப்பட்ட படைப்புக்களை ஒப்பிட்டுப் பார்க்கும். இந்த நாவலில் முக்கிய கருப்பொருளில் ஒன்று அண்ணா - தங்கச்சி பாசம்: அது காருமாமாவுக்கும் இந்தக் கதைசொல்லியின் அம்மாவுக்குமான உறவு. அதை தேவிபாரதி பொதுமனங்களுக்கு நன்கு பரிட்சயமான 'பாசமலர்' சிவாஜி - சாவித்திரி பாத்திரங்களை முன்வைத்துதன் நாவலில் காருமாமா X கதைசொல்லியின் அம்மா உறவை ஆழமாக எடுத்துச் செல்கின்றார். அதுஒருபடைப்பாளிக்குரிய சவால். வாசகரின் முன் அவர்களுக்கு நனகு ஏற்கனவே தெரிந்ததை வைத்து அதைத் தாண்டி என் எழுத்தால் செல்ல முடியும் என்பதால் வருகின்ற கம்பீரம். தேவிபாரதி அந்தச் சவாலை அதியற்புதமாகக் கையாண்டிருக்கின்றார். இதே போன்ற சவாலை, திருமணத்தின் பின் வருகின்ற உறவைச் சொல்லும் படைப்பான 'கமலி'யில் சி.மோகன் நமக்கு நன்கு அறிமுகமான ஜானகிராமனின் படைப்புக்களை அந்த நாவலுக்குள் வைத்தே அழகாக மீறிச் சென்றிருப்பார்.

காருமாமாவும் அவரை விட்டு தன் பிள்ளைகளோடு ஓடிப்போகின்ற ராசம்மா அத்தையும் காருமாமாவின் சகோதரிகளும் இந்தப் புதினத்துக்குள் வராது விட்டிருந்தால், வரலாற்றில் சும்மா வாழ்ந்துவிட்டுப் போயிருக்கக்கூடிய சாதாரண மனிதர்களாக இருந்திருப்பார்கள். ஆனால், தேவிபாரதி அவர்களை காலத்தில் மறைந்து போகாதவர்களாக மட்டுமின்றி, நம்மைப் போன்று முற்றிலும் அந்நியமான ஒரு வாழ்வை வாழ்ந்து கொண்டிருப்பவர்களிடையும் முக்கியமான மனிதர்களாக அவர்களைக் கொண்டு வந்து சேர்த்திருக்கின்றார். இவ்வாழ்வில் சாதாரணமானவர்கள் என்று சொல்லி பொதுப்பரப்பில் புறக்கணிக்கப்பட்ட மனிதர்களுக்கு, அது கலை அளிக்கின்ற மாபெரும் மரியாதை எனச் சொல்லலாம்.

"இளங்கோ" <elanko@rogers.com>

---

நீர்வழிப் படூஉம் - தேவிபாரதி; விலை ரூ.250; வெளியீடு: நற்றிணைப் பதிப்பகம், சென்னை 600005; கைபேசி: +91 94861 77208; மின்னஞ்சல்: natrinaipathippagam@gmail.com

# அம்ருதா வெளியீடுகள்

சொப்பன பூமியில்
₹ 130
பக்கங்கள்: 180







மனச்சிதைவு தரும் அலைக்கழிப்புகள்
₹ 200
பக்கங்கள்: 248

ரெண்டாம் ராயர் காப்பி கிளப்
₹ 160
பக்கங்கள்: 200







பாலு சத்யாவின்
குற்றத்தின் புனைபெயர்
₹ 98
பக்கங்கள்: 112


**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 044 - 2435 3555, 94440 70000.
மின்னஞ்சல்: info.amrudha@gmail. com. இணையதளம்: www. amruthamagazine. com

# மூன்று பேர்


## முபீன் சாதிகா

## ஓவியம்: உஷா சாந்தாராம்


*மயிலவன்-1*

அவன் பெயர் மயிலவன் என்று இருப்பதைக் குறித்து இதுவரை பலரும் அவனிடம் விளக்கம் கேட்டிருக்கின்றனர். அதற்கு முருகனின் வேறு பெயர் என்று சொல்லிவிட்டிருந்தான்.



அவனுக்கு இப்படி ஒரு விநோதமான பெயர் இருப்பதைக் குறித்து பெரிய ஆதங்கமே வந்துவிட்டது. பெயர் மாற்றிக்கொள்ளலாமா என்றும் நினைத்தான். ஆனாலும் வேறுபட்ட பெயராக இருப்பதால் நினைவில் வைத்துக்கொள்வது எளிது என்று எண்ணி ஆசுவாசப்படுத்திக் கொண்டான்.

ஒரு நாள் அவன் வேலை பார்க்கும் அலுவலகத் திற்கு அவனைத் தேடி ஒருவர் வந்திருப்பதாகச் சொன்னார்கள். அவன் யாரென்று பார்க்கப் போனான். தூரத்திலிருந்து பார்த்தால் அவனை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அருகில் சென்று நின்றான். “என் பெயர் மயிலவன். என்னை

எதற்காகப் பார்க்க வந்திருக்கிறீர்கள்" என்று கேட்டான். அவன், "எழுந்து வெளியில் சென்று பேசலாமா" என்று அழைத்துச் சென்றான். அருகில் இருந்த உணவு விடுதிக்கு வந்து அமர்ந்தார்கள். வந்தவன் தண்ணீர் அருந்தினான். அங்கே இங்கே பார்த்துவிட்டு தயக்கமாகப் புன்னகைத்தான். "எப்படித் தொடங்குவது என்று தெரியவில்லை" என்றான். "ஏதாவது சிக்கலா" என்று கேட்டான் மயிலவன். அவன் ஒரு சில நிமிடங்கள் கூர்ந்து பார்த்தான். "நீங்கள் என்னை அறியாமல் இருக்கலாம். நான் உங்களை நன்றாக அறிவேன்" என்றான். "எப்படி" என்றான் இவன். "தினம் உங்களைப் பின் தொடர்கிறேன்" என்றான் அவன். "எதற்காக" என்றான் இவன். "உங்கள் பெயருக்காக" என்றான் அவன். "உங்கள் பெயர் என்ன" என்று கேட்டான் மயிலவன். "என் பெயரும் மயிலவன்தான்" என்றான் வந்தவன்.

இவனுக்கு ஒரு சிறிய அதிர்ச்சி ஏற்பட்டது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, "எதற்காக என்னைக் காண வந்தீர்கள்" என்று கேட்டான். "இப்போது நீங்கள் பணிபுரிந்து கொண்டிருக்கும் இடத்தில் உங்களுக்கு எப்படி வேலை கிடைத்தது" என்று கேட்டான் அவன். "ஏன்" என்று கேட்டான் இவன். "தெரியாததுபோல்பேசக்கூடாது. உங்களுக்கும் எனக்கும் ஒரே பெயர் இருப்பதால் எனக்கு சிபாரிசு செய்யப்பட்ட வேலையில் நீங்கள் சேர்ந்துவிட்டீர்கள். அது உண்மைதானே" என்று கேட்டான் வந்தவன். "இல்லை" என்று இவன் தயங்கினான். "பரவாயில்லை. அப்போது எனக்கு ஒரு விபத்து ஏற்பட்டு பல நாள் மருத்துவமனையில் இருந்தேன். 'எப்படியும் உங்கள் வேலை எனக்குக் கிடைத்திருக்காது' என்று நினைத்து மனதைத் தேற்றிக்கொண்டேன். இருந்தாலும் உங்கள் நிறுவனத்தில் வந்து பார்க்கலாம் என்று விசாரித்தேன். அப்போதுதான் நீங்கள் பணிபுரிந்து கொண்டிருப்பது தெரிய வந்தது. அதுவும் நான் வரவேண்டியிருந்த அதே நாளில் அதே சிபாரிசுடன் நீங்கள் சேர்ந்திருக்கிறீர்கள் என்று அறிந்துகொண்டேன். முதலில் உங்கள் மீது கோபம் வந்தது. அதன்பின் உங்களின் ஆள் மாறாட்ட திருட்டை எல்லோரிடமும் வெளிப்படுத்தி உங்களை எதற்காகச் சிக்க வைக்கவேண்டும் என்று தோன்றியது. அதுவும் இல்லாமல் எனக்கு இப்போது வேலையும் தேவை இல்லை. நான் மயிலவன் என்ற பெயர் கொண்டவர்களைச் சந்திப்பதில் ஆர்வம் கொண்டிருக்கிறேன். என் வழியை அவன் தீர்மானிப்பான்" என்று ஆகாயத்தை நோக்கி கையைக் காட்டிக் குறிப்பிட்டான் வந்தவன்.

அவன் பேசியதைக் கேட்டு மயிலவனுக்கு அதிர்ச்சி. மேலும், 'அவன் தன்னை எதுவும் செய்ய வரவில்லை, வெறும் தன் திருட்டுத்தனத்தைச் சுட்டிக்காட்ட மட்டும் செய்திருக்கிறான். அதுமட்டும் இல்லாமல் மயிலவன் என்று தானும் பெயர் கொண்டிருப்பதால் தன்னைச் சந்திக்க ஆர்வம் கொண்டு வந்திருக்கிறான்' என்று நினைத்தான்.

வந்தவன் மகிழ்ச்சியுடன் எழுந்து புறப்பட்டுப் போனான். மீண்டும் அலுவலகம் வந்து அமர்ந்த மயிலவனுக்கு மிகவும் வெறுப்பாக இருந்தது. தான் ஒரு திருடன் என்று தன் முன் ஒருவன் கண்ணாடியை வைத்துக் காட்டிவிட்டுச் சென்றுவிட்டான் என்ற எண்ணம் அவனை நிலைத் தடுமாற வைத்தது. வீட்டுக்குக் கிளம்பினான். 'வேலையை விட்டுவிடலாமா' என்று யோசித்தான். இரு பெண் குழந்தைகள் உள்ளன. அவற்றை எப்படி வளர்ப்பது என்று யோசனையாக இருந்தது. வேலையை விட்டுவிட்டால் திருட்டைச் செய்யவில்லை என்றாகிவிடுமா எனவும் நினைத்துப் பார்த்தான். ஆனால், இதற்கு ஏதாவது பிராயச்சித்தம் செய்யவேண்டும் போல் அவனுக்குள் தோன்றியது. தற்கொலை செய்துகொண்டால் என்ன என்றும் நினைத்தான். உயிரைக் கொடுக்கும் அளவுக்கான திருட்டு இது இல்லை என்றும் சமாதானப்படுத்திக் கொண்டான். வேறு எப்படி இதற்குத் தீர்வு காண்பது என்றும் புரியாமல் வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தான்.

மீண்டும் அந்த நபரைச் சந்தித்துப் பேசலாமா என்றும் நினைத்துப் பார்த்தான். அது சிறிது ஆசுவாசத்தைக் கொடுத்தது. ஆனால், அது வீணான பிரச்சினைகள் ஏதாவது கொடுத்துவிட்டால் என்ன செய்வது என்றும் அவனுக்குள் தோன்றியது. வீடு வந்து சேர்ந்தான். தன் குழந்தைகளைப் பார்த்த போது அவை ஒரு நாள் தங்களுடைய தந்தை ஒரு திருடன் என்று தூற்றும் என்று தோன்றியது. மனைவியிடம் சொல்லவும் கூச்சமாக இருந்தது. சில நாள் அப்படியே விட்டுவிட்டால் சரியாகிவிடும் என்று நினைத்தான். யாரிடமும் பேசாமல் உணவை முடித்துக்கொண்டு உறங்கிப் போனான்.

காலையில் எழுந்து யாரிடமும் பேசாமல் எல்லா வேலைகளையும் முடித்துவிட்டு சாப்பிட்டு அலுவலகம் கிளம்பினான். வரும் வழியில் அவன் வேலைக்குச் சேர்ந்த நாளில் நடந்த அனைத்தும் அவனுக்கு மீண்டும் நினைவுக்கு வந்தன. அந்த அலுவலகத்திற்கு வேலைக்கு நேர்காணலுக்கு அவன் சென்ற போது அந்த நிறுவனத்தின் உரிமையாளர் அங்கு இருந்தார். அவன் பெயரை அழைத்தவுடன் அவருடைய அறையில் அவன் நுழைந்தான். அவனைக் கண்டவுடன் அவருக்கு மிகவும் மகிழ்ச்சியாகிவிட்டது. அவனுடைய மாமாவை அவருக்குத் தெரியும் என்றும் அவரால்தான் அந்த நிறுவனத்தை அவர் உருவாக்க முடிந்தது என்றும் அதற்கு நன்றி பாராட்ட அவனுக்கு வேலை கொடுப்பது அவருக்கு மகிழ்ச்சி என்றும் சொன்னார். மாமாவைப் பற்றி ஏதேதோ பேசினார். அவனுக்கு ஏதும் புரியவில்லை. வெறும் தலையாட்டினான். அவன் அமைதியாக இருந்ததே அவன் குடும்பத்தினரின் அடக்கம், பணிவு என்று பாராட்டினார். மேலாளரை அழைத்து அவனை



வேலைக்குச் சேர்த்திருப்பதாகச் சொல்லி சம்பளம் உள்ளிட்டவற்றைப் பேசும் படி கூறி அவருடன் அவனை அனுப்பிவைத்தார். அவனை அந்த அலுவலகத்தில் இதுவரை மிகவும் நல்ல முறையில் நடத்தி வந்திருக்கின்றனர். அதுவே அவனுக்கு ஆறுதலாக இருந்தது. இப்போது இந்த நிறுவனத்தின் உரிமையாளர் நினைத்திருக்கும் மயிலவன் தான் அல்ல என்று தெரிந்தால் தன் மீதிருக்கும் மதிப்பு சரிவதோடு தன்னை வேலையை விட்டு நீக்கிவிடுவார்கள் என்ற எண்ணம் தோன்றியதும் அவனுக்கு உடல் உதறி நின்றது. நேற்று வந்தவன் தனக்கு எந்த ஊறையும் விளைவிக்க வரவில்லை என்றாலும் தன் நிம்மதி போய்விட்டதால் மனஉளைச்சல் அதிகமாகிவிட்டதை எண்ணி மிகவும் சோர்ந்து போனான்.

இந்த எண்ணத்திலும் உளைச்சலிலும் ஆறு மாதங்கள் கடந்தன. அவன் பேச்சைக் குறைத்தான். வீட்டில் பேசுவதையே நிறுத்திவிட்டான். அவன் மனைவிக்கு அவனுக்குள் என்ன பிரச்சினை என்று புரியாமல் வேதனையாக இருந்தது. அலுவலகத்திலும் அவன் ஏதோ சிக்கலில் இருப்பதாக நினைத்தார்கள். அவனுக்கும் தானாகவே அவனுக்கு இருக்கும் பிரச்சினையை வெளிக்காட்டிவிட்டது போல் இருந்தது. ஆனாலும் அவனுக்கு மௌனமாக இருப்பதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. இதற்கு ஏதாவது ஒரு தீர்வைக் காணவேண்டும் என்ற வெறி மட்டும் அவனுக்குள் அவ்வப்போது வேகமாக எழுந்து அடங்கியது. மாலை நேரங்களில் கோயிலுக்குச் சென்று அமைதியாக அமர்ந்துவிடுவதை வழக்கமாக்கிக் கொண்டான். அது அவனுக்கு ஓரளவு நிம்மதியைத் தந்தது.

## மயிலவன்-2

மயிலவன் என்ற பெயரைத் தேடிக்கொண்டு வந்தவன், ஒரு தெருவில் ஒருவருடைய பெயர் மயிலவன் என்று இருப்பதை அறிந்து, அந்தத் தெருவில் அது யாராக இருக்கும் என்று தேடிக்கொண்டு வந்தான். அவன் தேடி வந்த வீட்டில் அவனை வரவேற்று உள்ளே அமர வைத்தனர். அவர்கள் வீட்டில் மயிலவன் என்று யார் இருக்கிறார்கள் என்று கேட்டான். முதியவர் ஒருவர் ஒரு குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்தார். இந்தக் குழந்தைக்குத்தான் மயிலவன் என்று பெயர் என அவர் சொன்னார். வந்தவனுக்கு ஏமாற்றமாக இருந்தாலும் அந்தக் குழந்தையை வாங்கிக் கொஞ்சினான். அது அவனை விநோதமாகப் பார்த்தது. சிறிது நேரத்தில் சிரித்து விளையாடியது. வந்தவன் அந்தக் குழந்தைக்கு ஏதாவது வாங்கித் தர ஆசையாக இருப்பதாகச் சொல்லி வெளியே தூக்கிப் போனான். அவனிடம் குழந்தை ஒட்டிக்கொண்டது.

அந்தக் குழந்தையுடன் சிறிது நேரம் பழகியவுடனேயே ஏதோ ஒரு பெரிய சொத்து கிடைத்துவிட்டது போல் அவனுக்குத் தோன்றியது. அந்தக் குழந்தையின் பெயர் தன்னுடைய பெயரான மயிலவன் என்று இருப்பதால் அப்படித் தோன்றுகிறதோ என்று நினைத்தான். இருந்தாலும் அந்தக் குழந்தையைப் பார்த்த போது தன்னையே பார்ப்பது போல் அவனுக்கு இருந்தது. அவனுக்கு அழுகையும் வந்தது. தனக்கு என்ன தேவை என்றே அவனுக்குப் புரியவில்லை. இது போன்ற ஒரு குழந்தை தேவையாக இருக்குமோ என்றும் நினைத்துப் பார்த்தான். குழந்தைக்கு சிறிய தின்பண்டங்களையும் விளையாட்டுப் பொருள்களையும் வாங்கிக் கொடுத்துவிட்டு வீட்டுக்குக் கொண்டுவந்து விட்டுவிட்டுக் கிளம்பினான்.

அடிக்கடி அந்தக் குழந்தையிருந்த வீட்டுக்கு வந்து அதனுடன் விளையாடிவிட்டுப் போனான். அவ்வப்போது அதைத் தூக்கிக்கொண்டு வெளியே போனான். ஒரு நாள் அவன் வெளியே போய்விட்டு வருகையில் எதிரே அலுவலகத்தில் கண்ட மயிலவன் இரு சக்கர வாகனத்தில் வந்துகொண்டிருந்தான். அவனைக் கண்டவுடன் பாய்ந்து சென்று பேசப் போனான். அவன் நிலை தடுமாறி இவன் மீது வண்டியை மோதப் பார்த்தான். இவன் குழந்தையைத் தவறவிட எங்கிருந்தோ வந்த அந்தக் குழந்தையின் பெற்றோர் வண்டியின் குறுக்கே புகுந்து குழந்தையைக் காப்பாற்ற முனைந்ததில் மயிலவனின் இரு சக்கரவாகனம் இடித்து இருவரும் தூக்கிவீசப்பட்டனர். எப்படியோ தடுமாறி தெருவில் நின்ற மயிலவனின் கையில் குழந்தை பத்திரமாக

வந்துவிட்டது. குழந்தையின் பெற்றோர் அதே இடத்தில் துடிதுடித்து இறந்துவிட்டனர்.

வண்டியை ஓட்டிய மயிலவனுக்குக் கை, கால் உதறத் தொடங்கியதால் அப்படியே சாலை ஓரத்தில் அமர்ந்துவிட்டான். குழந்தையுடன் இவன் மயிலவன் அருகே வந்து அமர்ந்தான். இவனைப் பார்த்து மயிலவனுக்குப் பெரும் அழுகை வந்தது. “முதலில் என்னை திருடன் என்று பட்டம் கொடுக்க வந்தீர்கள். இப்போது கொலைகாரனும் ஆக்கிவிட்டீர்கள்” என்று சொல்லி கண்ணீர் விட்டு அழுதான்.

“என்னை மன்னித்துக்கொள்ளுங்கள். உங்களைப் பார்த்த உற்சாகத்தில் ஓடிவந்தேன். இப்படி ஆகும் என்று நினைக்கவில்லை. குழந்தையின் பெற்றோர் இறந்து போனதுதான் பெரும் சோகமாக உள்ளது. இந்தக் குழந்தைக்கு இப்போது தாத்தாவைத் தவிர யாரும் இல்லை” என்றான். அதை எல்லாம் கேட்கும் மனநிலையில் மயிலவன் இல்லை. அடுத்து என்ன செய்வது என்றே புரியாமல் அமர்ந்திருந்தான். எங்கிருந்தோ காவல் துறை வாகனம் வந்து நின்றது. நடந்த நிகழ்வைக் குறித்து விசாரணை நடந்தது. மயிலவனை ஏற்றிக்கொண்டு பறந்தது.

குழந்தையைத் தூக்கிக்கொண்டு மயிலவன் அதன் வீட்டிற்குச் சென்று பார்த்த போது அதிர்ச்சியில் தாத்தாவும் இறந்துவிட்டது தெரிந்தது. குழந்தைக்கு இப்போது தான் மட்டுமே பொறுப்பு என்று புரிந்தவுடன் என்ன செய்வது என்று தெரியாமல் அங்கேயே மயிலவன் அமர்ந்துவிட்டான். தன்னால்தான் இத்தனை பிரச்சினைகளும் வந்திருக்கின்றன என்பதும் இதை எப்படி எதிர்கொள்வது என்ற குழப்பமும் மயிலவனைப் பெரிதும் பாடுபடுத்தின.

அடுத்தநாள் காவல்துறை அழைத்துச் சென்ற மயிலவனைப் பார்க்க அவன் நிறுவன உரிமையாளர் வந்திருந்தார். அவன் குடும்பத்தைப் பார்த்துக்கொள்வதாக உறுதி கூறினார். மயிலவன் அமைதியாக இருந்தான். அப்போது குழந்தையுடன் மயிலவன் காவல்துறை அலுவலகத்தில் நுழைந்தான். மயிலவனிடம் வந்து தன்னால்தான் இத்தனை சிக்கல்களும் நடந்துவிட்டன எப்படியாவது அவன் குடும்பத்தைத் தான் காப்பாற்றுவதாக உறுதி அளித்தான். இதைக் கவனித்த மயிலவனின் நிறுவன உரிமையாளர் அவனைப் பற்றி விசாரித்தார். மயிலவனுக்கு தன் பொய் வெளிப்படும் நேரம் வந்துவிட்டது என்று நினைத்து மேலும் வயிற்றைக் கலக்கியது. குழந்தையை வைத்துக் கொண்டிருந்த மயிலவன் உடனே தான் மயிலவனின் நெருங்கிய நண்பன் என்றும் தன்னால்தான் அந்த விபத்து நேரிட்டதாகவும் உரிமையாளரிடம் சொன்னான். மயிலவனின் வேலையை அவன் தண்டனை காலம் முடியும் வரை அவன் பார்த்துக்கொள்ளச் சொல்லி உரிமையாளர் சொல்லிவிட்டார். அது மயிலவனுக்கு துக்கத்தையும் ஆறுதலையும் ஒரே நேரதில் தந்தது. அவர் கிளம்பிய பின் குழந்தையைத் தூக்கிக்கொண்டு மயிலவன் அருகே வந்து தான் எப்போதும் அவன் ஆள் மாறாட்டம் செய்ததை வெளிப்படுத்தப் போவதில்லை. அஞ்சவேண்டாம் என்றான்.

மயிலவனுக்கு அப்போது பெரும் துயர் பீடித்தது போல் இருந்தது. இந்த வேலையில் கிடைக்கும் வருமானத்தைக்கொண்டு அவன் குடும்பத்தையும் அந்தக் குழந்தையையும் பார்த்துக்கொள்ளப் போவதாகவும் அவன் தண்டனை முடிந்து வெளியே வந்த பின் அந்தக் குழந்தையை மட்டும் பராமரித்துக் கொள்ளவேண்டும் என்றும் மீண்டும் அந்தப் பணியை அவனுக்கே வழங்குமாறும் உரிமையாளரிடம் கெஞ்சிக் கூத்தாடி கேட்டுப் பெற்றுத் தருவதாகவும் சொல்லிவிட்டு அவன் முகத்தைப் பார்த்தான் மயிலவன். அவன் கண்களில் கண்ணீர் வழிந்தது. “என் வாழ்க்கையில் செய்த ஒரு குற்றத்திற்கான தண்டனைதான் இது என நினைக்கிறேன். ஆனால், அதிலும் ஓர் ஆறுதலாக நீங்கள் என் குடும்பத்தைக் காப்பாற்ற வந்திருக்கிறீர்கள். மிக்க நன்றி. நான் அந்தக் குழந்தையை நிச்சயம் நன்றாக வளர்ப்பேன்” என்றான். அது போதும் என்று சொல்லிவிட்டு மயிலவன் குழந்தையுடன் நகர்ந்தான்.

## மயிலவன்-3

மயிலவனுக்கு விபத்து ஏற்படுத்தியதற்காக இரண்டு வருட சிறைத் தண்டனை வழங்கப்பட்டது. அவன் சிறையில் இருந்த காலகட்டத்தில் அவன் குடும்பத்தை மயிலவன் பாதுகாத்தான். அவனுடைய வேலையை அவன் நிறுவனம் வழங்கியது. அந்த நிறுவன உரிமையாளர் அடிக்கடி அவனைச் சிறையில் வந்து சந்தித்துப் பேசிவிட்டுப் போனார். மயிலவன் அவனுடைய குடும்பத்தையும் விபத்து நடந்ததால் பெற்றோரை இழந்த அந்தக் குழந்தையையும் பராமரிக்க வேண்டியிருப்பதால் அவனுக்குச் சில ஆயிரம் ரூபாய்கள் சம்பளத்தில் அதிகரித்துத் தருவதாக உரிமையாளர் சொன்னார். அவனுக்கு அதெல்லாம் திருப்தி தந்தாலும் தன்னுடைய கவனமின்மையால் விபத்தை ஏற்படுத்தி சிறையில் அடைபட்டுவிட்டதை எண்ணி பெரிதும் வருந்தினான். இரண்டு ஆண்டுகள் எப்படி கடக்கும் என்று நினைத்து மிகவும் ஆதங்கப்பட்டான்.

மயிலவன் புதிய வேலையில் சேர்ந்து, அந்தக் குழந்தையின் வீட்டில் தங்கிக்கொண்டு, சிறை சென்றுவிட்ட மயிலவனின் குடும்பத்தையும் பராமரித்துக் கொண்டான். அந்தக் குழந்தையை மயிலவனின் குடும்பமே வளர்த்துக்கொண்டது. இரு பெண் குழந்தைகளும் ஆண் குழந்தையான மயிலவனைப் பாசத்துடன் வளர்த்தார்கள். மயிலவனுக்குத்தன்னால்நேர்ந்தஇக்கட்டைநினைத்து



அவனும் தினமும் வருந்திக் கொண்டிருந்தான். சிறைக்குச் சென்று மயிலவனை அடிக்கடி சந்தித்து வந்தான். அவன் சிறையை விட்டு வந்தவுடன் அவனுக்கு மீண்டும் தன் வேலை கிடைத்துவிடும் என்று சொல்லி அவனை ஆறுதல்படுத்தினான். தன்னை மன்னித்துவிடச் சொல்லி பெரிதும் கெஞ் சினான். சிறையில் இருப்பதால் ஏற்பட்ட துக்கமும் தன் குடும்பத்தைப் பார்க்க முடியாத இன்னலும் சிறையை விட்டு வந்தவுடன் அந்தப் புதிய குழந்தையை வளர்க்க வேண்டிய பொறுப்பும் என எல்லாம் சேர்ந்து அவனைக் கலங்கடித்தன.

இரண்டாண்டுகள் கழிந்தன. அவன் விடுதலை செய்யப்பட்டான். வீட்டுக்கு மயிலவன்தான் அழைத்து வந்தான். உணவு உண்டு முடித்து அவனை அலுவலகம் அழைத்துச் சென்று தன் வேலையை அவனிடம் ஒப்படைப்பதாக உரிமையாளரிடம் சொல்லிவிட்டு அவனிடமும் சொல்லிக் கொண்டு புறப்பட்டான். அவன் எங்கே போகிறான் என்பதை மயிலவன் கேட்கவில்லை. அவன் தன் வீட்டுக்குப் போய்விடுவான் என்று நினைத்துக்கொண்டிருந்தான். பிறகு அவனைத் தொடர்புகொள்ளலாம் என்றும் எண்ணிக்கொண்டான். அலுவலகத்தில் அவனது சிறை அனுபவங்களைப் பற்றிப் பலரும் வந்து கேட்டு அறிந்துகொண்டு போனார்கள். அவனுக்குப் பலரும் ஆறுதல் சொன்னார்கள். அதெல்லாம் புதிய அனுபவமாக இருந்தது. உரிமையாளரும் அவனை அழைத்து இனி கவலை வேண்டாம் என்று சொல்லி அனுப்பினார்.

வீட்டுக்கு வந்தவன் பெற்றோர் இல்லாத அந்த குழந்தையைப் பார்த்தான். அந்தக் குழந்தை அவனை விநோதமாகப் பார்த்தது. அது பேசத் தொடங்கி இருந்தது. அவனுடைய குழந்தைகள் அப்பா என்று அழைத்ததால் அதுவும் அவனை அப்படியே அழைத்தது. அதை ஒழுங்காக வளர்த்து நல்ல எதிர்காலத்தை அமைத்துக் கொடுப்பதுதான் அதனுடைய பெற்றோருக்குத் தான் செய்யும் பிரதி பலனாக இருக்கும் என்று எண்ணிக்கொண்டான். இரண்டாண்டுகள் அவர்களை நல்ல முறையில் பராமரித்த மயிலவனைப் பார்க்கலாம் என்று அந்தக் குழந்தை இருந்த வீட்டுக்குப் போனான். அங்கு, அவன் வரவில்லை என்றார்கள். அவனுடைய தொடர்பு எண்ணிலும் அவனோடு பேச முடியவில்லை. அவன் எப்படியும் தன்னைப் பார்க்க வருவான் என்று நினைத்துக்கொண்டு அமைதி காத்தான்.

இரண்டு நாட்கள் ஆன பின்னும் மயிலவன் வரவில்லை. அவன் எங்கே போயிருப்பான் என்று தேடவேண்டும்என்று அவனுக்குத்தோன்றியது.அவன் தன் சொந்த ஊர் என்று கூறியிருந்த இடத்திற்குச் சென்று விசாரித்த போது அவன் அங்கு வந்து மூன்றாண்டுகள் ஆகிவிட்டன என்று சொன்னார்கள். அவனுடைய பெற்றோர் இறந்துவிட்டதாகவும் அவனை அவன் பெற்றோர் அநாதை ஆசிரமத்திலிருந்து தத்தெடுத்து வளர்த்தார்கள் என்றும் தெரியவந்தது. அவனுடைய மாமா ஒருவர் அங்கிருந்தார் என்றும் அவரும் இறந்துவிட்டதால் அவன் அந்த ஊருக்கு வருவதையே நிறுத்திவிட்டதாகவும் தெரிந்தது. அவன் எங்கே போயிருப்பான் என்று அங்கிருந்த யாருக்கும் தெரியவில்லை. அவன் முகவரியைக் கேட்டுத் தெரிந்துகொள்ளாமல் விட்டது தன்னுடைய தவறு என்று நொந்துபோய் வீடு வந்து சேர்ந்தான்.

வீட்டில் குழந்தை மயிலவன் அவனை வளர்த்த அந்த மயிலவனைக் காணாமல் ஏங்கிப் போனது. அதற்குத் தன் ஏக்கத்தைச் சொல்லத் தெரியாமல் அடிக்கடி அழுதது. அதனுடைய நினைவை மாற்றி அதை அவன் உற்சாகம் பெற வைத்தான்.

அவனை நன்றாகப் படிக்க வைத்தான். அவனும் பள்ளியில் சிறந்த மாணவனாக இருந்தான். ஆசிரியர்கள் அவனுடைய திறனைக் கண்டு வியப்படைந்து அவன் அதிக மதிப்பெண்கள் பெற உதவினர். அவன் மருத்துவனாக வேண்டும் என்று மயிலவன் விரும்பினான். அதே போல் அவனுக்கு மருத்துவப் படிப்பு கிடைத்தது. அதையும் அவன் படிக்க மயிலவன் பெரிதும் ஆதரித்தான். அவனுடைய பெண் குழந்தைகள் சுமாராகப் படித்துத் தேறினர். அரசு வேலைகளுக்குத் தேர்வு எழுதி தேர்ச்சி பெற்று அந்த வேலைகளிலும் சேர்ந்தனர். அவர்களுக்கும் திருமணம் செய்து முடித்தான். மருத்துவப் படிப்பு முடித்து மேற்படிப்பும் படித்தான் மயிலவன். அவனுக்கு ஒரு பெரிய மருத்துவமனையில் வேலையும் கிடைத்தது. மயிலவனுக்குப் பெரும் திருப்தி ஏற்பட்டது. தன் கடமைகள் அனைத்தும் முடிந்துவிட்டன என்று தோன்றியது.

மருத்துவத்துறையில் அவன் பலருக்கும் இலவச சிகிச்சைத் தரவேண்டும் என்று மயிலவன் அவனை வலியுறுத்தினான். அவனும் அதை ஏற்றுக்கொண்டான். அப்போது மயிலவனுக்கு உடல்நிலை ஏனோ சட்டென்று சீர் குலைந்தது. மருத்துவராக மயிலவன் இருந்ததால் உடனடியாக அவனை மருத்துவமனையில் சேர்த்தான். அங்கு அவனை அழைத்து, மயிலவன் என்ற பெயரில் இருந்தவன்தான் அவனைத் தன்னிடம் கொடுத்து வளர்க்கச் சொல்லியதையும் அவனுடைய பெற்றோர் விபத்தில் இறந்துவிட்டதையும் அதற்குத் தான் காரணம் ஆனதையும் மருத்துவன் மயிலவனிடம் சொன்னான். மேலும், தான் சிறையிலிருந்து வெளியே வந்தவுடன் அந்த மயிலவன் காணாமல் போய்விட்டதாகவும் அவனை எப்படியாவது தேடிக் கண்டுபிடித்து அவனிடம் தான் கடமையை நிறைவு செய்துவிட்டதைச் சொல்லவேண்டும் என்றும் கூறினான்.

மருத்துவன் மயிலவன் தான் அதை நிச்சயம் செய்வதாக உறுதி கொடுத்தான். அதன் பின் சில மணி நேரங்களில் மருத்துவமனையிலேயே மயிலவனின் உயிர் பிரிந்தது.

மருத்துவன் மயிலவன் பல இடங்களிலும் மயிலவனைத் தேடிக்கொண்டிருந்தான். ஒரு நாள் ஒரு மலைப் பிரதேசத்தில் ஓர் ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தான். அங்கு ஒரு சாமியார் அமர்ந்து பலருக்கும் ஆசி வழங்கிக் கொண்டிருந்தார். அவரைப் பார்த்தவுடன் மயிலவனுக்கு அவரிடம் ஆசி வாங்கவேண்டும் என்று தோன்றியது. கூட்டம் அதிகமாக இருந்ததால் அமைதியாக தன் முறை வரும் வரைக் காத்திருந்தான்.

அவன் முறை வருவதற்கு சற்று முன் சாமியார் எழுந்து வெளியே போனார். அவன் பின் தொடர்ந்து போனான். உடன் இருந்த சிஷ்யர்கள் விலகிச் சென்றுவிட்டார்கள். காட்டுக்குள் தனியாக அந்த சாமியார் நடந்து சென்று கொண்டிருந்தார். அவனும் அவரைப் பின் தொடர்ந்து வேகமாகச் சென்றான். ஒரு குளம் வந்தது. அப்போது சாமியார் திரும்பி அவனைப் பார்த்தார். அவன் அதே இடத்தில் உறைந்து நின்றுவிட்டான். குளம் அருகே சாமியார் அமர்ந்தார். அவன் அருகில் சென்று அமர்ந்து கண்களை மூடிக்கொண்டு தான் தேடி வந்த மயிலவன் பற்றியும் தன்னை வளர்த்த மயிலவன் பற்றியும் தான் மருத்துவனாகிவிட்டது பற்றியும் தன் கடமை முடிந்துவிட்டதாகச் சொல்லிவிட்டு தன்னைக் காப்பாற்றிய மயிலவனிடம் அந்தச் செய்தியைச் சேர்த்துவிடச் சொல்லி அவர் இறந்துபோனதையும் சாமியாரிடம் சொல்லி முடித்தான். அவன் கண் திறந்து பார்த்த போது சாமியார் எழுந்து நடந்து கொண்டிருந்தார். உடனே அவனும் எழுந்து நடந்தான். அவனைத் திரும்பிப் பார்த்து, "பின் தொடராதே நீ சொல்ல வந்தது தனக்கு முன்பே தெரியும்" என்று சொல்லிவிட்டு அவர் காட்டில் மறைந்துபோனார்.

தான் தேடி வந்த மயிலவன் அவர்தான் என்பது போல் அவனுக்குப் புரிந்தது. தன்னை வளர்த்தவருடைய இறுதி ஆசையை நிறைவேற்றிவிட்ட திருப்தி அவனுக்குள் ஏற்பட்டது.

முபீன் சாதிகா
<mubeensadhika@gmail.com>

Form IV

Statement about ownership and other particulars about newspaper 'AMRUDHA' as required to be published under section 19-D subsection (b) of the Press andRegistration of Books Act read with Rule 8 of the Registration of Newspapers (Central Rules) 1956

| | | |
|---|---|---|
| 1 | Place of publication | CHENNAI |
| 2 | Periodicity of the publication | Monthly |
| 3 | Printer's name | A.Chandran, Ayyanar Offset. 10 Subba RaoNagar, Choolaimedu, Chennai-94 |
| 4 | Publisher's name, nationality and address | G.Thilakavathi<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 5 | Editor's name, nationality and address | Dr Prabhu Thilaak<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or share holders, holding more than one percent of the total capital | G.Thilakavathi; Dr Prabhu Thilaak; Ms Shruthi Thilaak- Directors- White Lotus Books Pvt. Ltd<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |

I, G.Thilakavathi hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

Date : 11.02.2024 Signature of publisher

# ந.பெரியசாமியின் அகப்பிளவு

தாமரைபாரதி

இந்த தொகுப்பை இரு பகுதிகளாகப் பகுத்துள்ளார், ந. பெரியசாமி; 1. அந்தரங்க நிலா 2. தாபப் பித்து.

திருக்குறளில் காமத்துப்பாலில் உள்ள கற்பியல், களவியல் ஆகிய பகுதிகளில் இருந்து காதல் சிறப்புரைத்தல், குறிப்பு அறிதல், புணர்ச்சி மகிழ்தல், பிரிவாற்றாமை, படர் மெலிந்து இரங்கல், பசப்புருபருவரல், நினைந்தவர் புலம்பல், பொழுது கண்டு இரங்கல், நெஞ்சொடு புலம்பல், அவர் வயின் விதும்பல், இரவுக்குறி, பகற்குறி ஆகிய களவுத்துறைகளில் கவிதைகள் புனைந்துள்ளார். இவை அனைத்தும் தற்கால, நவீன பின் காலனிய கால, தகவல் தொழில்நுட்ப புரட்சியில் சமூக ஊடகங்களின் பிடியில் அகப்பட்டுக்கொண்டிருக்கக்



கூடிய, இந்த வாழ்க்கையிலும், இவ்வாறான காதல் மற்றும் காமம் சார்ந்த அனைத்துத் துறைகளும் தொடர்ந்து இருப்பதை தனது கவிதைகள் வழியாக அழகாக சொல்லிக்கொண்டே செல்கிறார். மேலும் சில குறுந்தொகைப்பாடலின் வரிகளும் வருகின்றன.

மனிதனின் இயல்பூக்கங்களில் அடிப்படையான அன்புசெய்தலின் இரு கூறுகளான காதல், காமம் மற்றும் அது சார்ந்து ஏற்படுத்தக் கூடிய உள்ளக் கிளர்ச்சியின் வெளிப்பாடுகளாகத் தொகுப்பிலே தலைவன், தலைவி, பாங்கன், தோழி கூற்றாகப் பல கவிதைகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன.

நெய் ஏற்கும் தீயாக, சீம்பால் துண்டுகளாக காமம் தொடர்ந்துகொண்டே இருக்கிறது. நிலமென்பது உடலாகவும் மழை என்பது காமமாகவும் விரிந்துகொண்டே இருக்கிறது. பகற்குறியில் பூங்காவில் சந்திக்கும் காதலர்கள் எழுந்து சென்ற பிறகு அங்கே காமம் 'காண்டம்'மாய்க் கிடக்கிறது. பேருந்து நிலைய பட்டணக் கழிவறை காமத்தின் வடிகாலாய்த் திகழ்கிறது. தன் உடலை தான் ரசிக்கும் நிலையில் நவீனப் பெண் ஆடி முன் நிழலாடுகிறாள்

இரவுக்குறியின் போது ஆசையும் காமமும் இங்குமங்குமாக அலைவுற்று தீண்டலின் தீவிரத்தில் நதியையே விழுங்குகிறது. 'சரணாகதி' என்னும் கவிதையில் வரும் இந்த உருவகம் நன்று. காமத்தைக் கிணறாக, நீரோடையாக, நதியாக, கடலாக, நிலமாக, மழைத்துளிகளாக உருவகப்படுத்தும் கவிதைகள் வாசிப்பின்பத்துக்கு உகந்தவை எனலாம்.




'மேகநினைவு' என்னும் படிமம் காதலின் பிரிவின்பால்எழும்துயரை உணர்த்துகிறது. கடும்புனல் என்னும் கவிதையில் ஊற்றாய் பெருக்கெடுக்கும் காமம் கடலாக இருக்கிறது. அந்தக் கடலில் துடுப்பற்ற தோணியாகத் தத்தளிக்கும் மனதை அறிய முடிகிறது.

'பிணக்கற்றல் பேரின்பம்' என்னும் கவிதையில் நீர் நிரம்பிய குளம் மனம் கவரும் யானையாகிறது என்கிற உருவகப்படுத்துதல் வாசிப்பிற்கு மீமெய்ம்மைத்தன்மையுடன் இனிமைத் தன்மையைத் தருகிறது. இது போலவே 'நட்சத்திர மலர்', 'குடை', 'மிடறு இசை' ஆகிய கவிதைகளில் மீமெய்ம்மை இழையோடுகிறது.

இத்தொகுப்பைப் படிப்பவர்கள் திருக்குறளில் உள்ள 1130, 1121, 1091, 1104, 1167, 1151, 1176, 1184, 1120, 1230 ஆகிய குறள்களைப் படித்துவிட்டுப் படிப்பது நன்றெனக் கருதுகிறேன். மேலும் பேரிலக்கிய கதைத் தொன்மங்களான சீதை, குந்தி, சூர்ப்பனகை ஆகியோரைப் பற்றியும் நன்கறிந்துகொண்டு வாசித்தல் பயனளிக்கும். அவர்களின் காமத்தை செம்மையான பகடியின் மூலம் மீள்வாசிப்புக்கு உட்படுத்தும் கவிதைகள் முக்கியமானவை. அதிலும் குந்தி கவிதையில், 'ஒவ்வொரு கல்லையும் / ஒவ்வொரு உருவாக்கி / குலுக்கி போட்டாள் / உலகம் கண நேரம் / ஆடி நின்றது" என்ற பகடி அருமை. இதை நீங்கள் முழு கவிதையாக வாசித்தால் முழுமையாக அனுபவிப்பீர்கள். இதேபோல அவதார சகோதரர்கள், பாஞ்சாலர்கள் பற்றிய பகடியும்.

தொகுப்பில் தேவையில்லாத சில கவிதைகளும் இருக்கத்தான் செய்கின்றன. 'உடனிருக்கும் நிலா' ஓர் அறிக்கையைப் போல இங்கே தேவையற்றுத் துருத்திகொண்டிருப்பதாகப் படுகிறது. அதே போல ஒரே கவிதை இரண்டு இடங்களில் வருகிறது. அதன் தலைப்பு 'ஊடல் மரமேறும் வேதாளம்'. இரண்டாவதாக வருகிறதில் கடைசி இரண்டு வரிகள் மட்டும் வரிசை மாற்றி எழுதப்பட்டுள்ளன.

'தாபப்பித்து' கவிதை, 'வண்டு குடைந்த துளையின் / வழி கசிந்த கரும்பின் / நீர்ச்சுவை மிஞ்சும்" எனத் தொடங்குகிறது. இதில் 'துளையின்' என்ற சொல்லில் 'இன்' என்கிற ஐந்தாம் வேற்றுமை உருபு வருவதைப்போல நீர்ச்சுவை மிஞ்சும் என்பதற்குப் பதிலாக 'நீர்ச்சுவையை மிஞ்சும்' என இரண்டாம் வேர்றுமை உருபு'ஐ' சேர்ந்துவந்திருந்தால் வாசிப்புக்கு எளிமையும் இனிமையும் கிட்டியிருக்குமெமக்கு.

கவிதைகளுக்கான ஓவியங்கள் வரைந்திருக்கும் கார்த்திகேயன் கவிதைகளை நன்கு உள்வாங்கி ஓவியங்களாக வெளிப்படுத்தியிருப்பது சிறப்பு. சொற்கள் வெளியீடாகப் புத்தக வடிவமைப்பு அருமை.

தாமரைபாரதி <thamaraibharadhi@gmail.com>

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

# டோனி மாரிசன்
## 1993
### தமிழில்: ஸிந்துஜா

*“முன்னொரு காலத்தில் ஓர் வயதான பெண்மணி இருந்தாள். அவளுக்குப் பார்வை இல்லை; ஆனால், புத்திசாலி.” அல்லது அது ஓர் ஆண் மகனா? ஒரு வேளை ஒரு குரு; அல்லது குழந்தைகளைத்*

*தாலாட்டும் தெருப் பாடகன்? இக்கதையை நான் கேட்டிருக்கிறேன். இதையே வேறு பல மொழிகளிலும்.*

*“முன்னொரு காலத்தில் ஓர் வயதான பெண்மணி. பார்வையற்றவள். புத்திசாலி.”*

*நான் அறிந்திருந்த காலத்தில் இந்தப் பெண்மணி அமெரிக்கக் கறுப்பு அடிமை. நகரத்துக்கு வெளியே ஒரு சிறிய வீட்டில் வசிக்கிறாள். அவளது ஞானம் கேள்விக்கு அப்பாற்பட்டது. முன்னோடிகள் எவரையும் கொண்டிராதது. அவளது மக்களைப் பொருத்த வரை அவள் இட்டதுதான் சட்டம்; வரம்பு மீறலும் அவளது அதிகாரத்திற்கு உட்பட்டது. அவளுக்குத் தரப்பட்ட மரியாதையும் எல்லை கடந்து மக்களிடம் ஏற்படுத்திய பிரமிப்பும் சொல்லவொண்ணாதவை. நகரத்தில் இம்மாதிரியான கிராமிய ஆற்றல் எப்போதும் வணங்கத்தக்கதாகவே இருந்தது.*



*ஒரு நாள் சில இளைஞர்கள் அவளது தீர்க்க தரிசன மகிமையை ஒப்புக்கொள்ளாதவர்களாய் அவளைத் தேடி வந்தனர். அவர்களது குறிக்கோள் அவளது பித்தலாட்டத்தை வெளிப்படுத்த வேண்டும் என்பது. அவர்கள் திட்டமிட்டது இதுதான்: அவளது வீட்டுக்குள் நுழைந்து அவளிடம் ஒரேயொரு கேள்வியைக் கேட்டு அவளைப் பதிலளிக்கச் செய்வது. பார்வையற்ற அவளிடம் ஒருவன் கேட்கிறான்: “அம்மா, என் கையில் ஒரு பறவையை வைத்திருக்கிறேன். அது உயிருடன் இருக்கிறதா அல்லது செத்துவிட்டதா?”*

*அவள் பதில் அளிக்காமல் இருக்கிறாள். மறுபடியும் அந்தக் கேள்வி கேட்கப்பட்டது: “என் கையில் உள்ளது உயிருள்ள பறவையா அல்லது செத்துவிட்ட ஒன்றா?”*

*அப்படியும் அவள் பதிலளிக்கவில்லை. அவள் பார்வையற்றவள். அதனால், பறவையை விடுங்கள், வந்திருப்பவர்களைக் கூட அவளால் காண முடியாது. அவர்களின் குறிக்கோள் என்னவென்று அவளுக்குத் தெரிந்திருந்தது.*



முதியவளின் நீண்ட மௌனம் வந்திருப்பவர்களைச் சிரிப்பில் ஆழ்த்தியது.

இறுதியாக அவள் பேசுகிறாள். அவள் குரல் மென்மையாக, ஆனால், கண்டிப்பு நிறைந்ததாக எழுகிறது: "எனக்குத் தெரியாது. நீ வைத்திருக்கும் பறவைக்கு உயிர் உள்ளதா இல்லையா என்று எனக்குத் தெரியாது. ஆனால், அது உன் கையில் இருக்கிறது."

அவள் சொன்னதை இவ்வாறு அர்த்தப்படுத்திக் கொள்ளலாம்: அது இறந்திருந்தால் அப்படி இறந்த பறவையைத்தான் நீ எடுத்துக்கொண்டு வந்தாய்; அல்லது அதை நீ கொன்றுவிட்டாய். அது உயிருடன் இருந்தால், அதை நீ இப்போதும் கொல்ல முடியும். அது உயிருடன் இருப்பது உன் முடிவைப் பொறுத்தது. எப்படியிருந்தாலும் அதற்கு நீதான் பொறுப்பை ஏற்க வேண்டியவன்."

அவளுடைய நிராதரவற்ற நிலையையும் தங்கள் அதிகாரத்தையும் காண்பிக்க வந்த இளைஞர்கள், அவளைக் கேலி செய்ததற்காக மட்டுமல்ல, அரக்கத்தனமாக ஓர் உயிரைக் கொலை செய்ததற்காகவும் அவர்களே பொறுப்பு ஏற்கவேண்டு மென தண்டிக்கப்படுகிறார்கள். அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்வதிலிருந்து விடுபட்டு அதனை எவ்வாறு நற்செயல்களுக்கு உபயோகப்படுத்த முடியும் என்று அந்த மூதாட்டி வழிகாட்டுகிறாள்.

கையிலிருந்த சிறிய பறவையைப் பற்றிய யூகம் என்னைஎப்போதும்கவருவதாய்இருக்கிறது.குறிப்பாக என் எழுத்து இப்போது என்னை இந்த இடத்தில் கொண்டு வந்து நிறுத்தியிருப்பதை நினைக்கையில். நான் அந்தப் பறவையை மொழியாகவும் அந்த மூதாட்டியைப் படைப்பாளியாகவும் பார்க்கிறேன். பிறக்கும்போதே அவளுடன் ஒட்டிக்கொண்டுவிட்ட மொழி எப்படிக் கையாளப்படுகிறது, வலம் வருகிறது, ஏன் தேவையற்ற மோசமான செயல்களுக்குப் பிறரால் உபயோகப்படுத்தப் படுகிறது என்னும் கவலைகளைக் கொண்டிருக்கிறாள். படைப்பாளியாக அவள் மொழியை ஓரளவு அமைப்பு சார்ந்ததென்றும் ஒருவரின் கட்டுப்பாட்டுக்குள் அடங்குவது என்றும், ஆனால், பெரும்பாலும் விளைவுகளை ஏற்படுத்தும் வல்லமை பெற்றது என்றும் நினைக்கிறாள். ஆகவே இளைஞர்கள் அவள் முன் வைக்கும், "அது உயிருடன் உள்ளதா? அல்லது இறந்துவிட்டதா?" என்னும் கேள்வி யதார்த்தமானதுதான். ஏனெனில் மொழி அழிவற்றதல்ல; ஒருவரின் பலத்தின் மேல் நின்று உயிர் வாழ நினைப்பது. அவளைத் தேடி வந்தவர்கள் கையில் இறந்த பறவை இருந்திருந்தால் அதன் சாவுக்கு அவர்களே பொறுப்பு. அவளைப் பொறுத்தவரை உயிர்ச் சக்தி இல்லாத ஒரு மொழி பேசப்படுவதிலிருந்தும் எழுதப்படுவதிலிருந்தும் விலகிச்சென்றுமரித்துவிடுகிறது.முடக்கப்பட்டுவிட்ட தனது நிலமையைப் பார்த்து அம்மொழி அடங்கிக் கிடக்கிறது. உயிரற்ற அந்த மொழி தணிக்கை செய்யப்பட்டுக் கிடக்கிறது. அதனின் அடக்கு முறைக்குள் அது காண்பதெல்லாம் தன்னை ஒரு போதையிலிருக்கும் நார்சிசிஸ்ட் என்றுதான். தனிமைப்பட்டு அடக்குமுறையால் ஏவப்பட்டும் உள்ள அதுஇறக்கும்தருவாயிலும் அதன்செயல்களின் விளைவுகளால் பேராளுமைகளை முறியடிக்கின்றது. மனசாட்சியைத்தடுத்துநிறுத்துகிறது.மனிதவளத்தைப் புதைக்கப் பார்க்கிறது. எந்த விசாரணையையும் ஏற்றுக்கொள்ள மறுக்கும் அது, பொய்களை,



புனைசுருட்டுகளை வெளிப்படுத்துகிறது.

அரசுமொழி அறியாமைக்குத் தரும் அங்கீகாரம் கலவரமூட்டக் கூடியது. இருந்தும் அது அங்கே நடமாடிக்கொண்டு இருக்கிறது - ஊமையாக, பாதகங்களைப் புரிந்துகொண்டு, அழிவிற்கான உணர்ச்சிகளைத் தூண்டிக்கொண்டு, பள்ளிச் சிறார்களை மயக்கிக்கொண்டு, கொள்ளை அடிப்பவர்களுக்கு இடம் தந்துகொண்டு, நிலையான ஒருங்கிணைந்த அமைப்பு என்னும் மாயை மக்களிடம் ஏற்படுத்திக்கொண்டு.

அலட்சியத்தினாலோ துருப்பிடித்தோ உதாசீனத் தினாலோ இகழ்ந்தோ அரசாணையினாலோ ஒரு மொழி இறக்கும் போது அவள் மட்டுமல்ல, மொழியின் பயனாளர்களும் மொழியை உருவாக்குபவர்களும் அந்தச் சாவுக்குப் பொறுப்பேற்க வேண்டியவர்கள் என்பதில் எந்தவித சந்தேகமும் இல்லை. அவளுடைய நாட்டில் புரிதலையும் அன்பையும் வழிகாட்டலையும் போதிக்கவல்ல மொழியின் பலத்தை, வயதுக்கு வந்தவர்கள் ஒதுக்கி விட்டுவிட்ட நிலையில், பேச முடியாதவர்களின் குரல்களை வெளியுலகத்துக்கு எடுத்துச் செல்லும் பொறுப்பைத் துறந்துவிட்ட நிலையில், குழந்தைகள் தங்களின் நாக்குகளைத் துண்டித்துவிட்டு துப்பாக்கிகளை ஏந்துகிற நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டார்கள். நாக்கைத் துண்டித்துக்கொள்ளும் தற்கொலை முயற்சி குழந்தைகளுக்கு மட்டுமே கிடைத்ததாகச் சொல்ல முடியாது. அரசை ஏற்று நடத்தும் முதிர்ச்சியில்லாத தலைகளும் அவர்களின் ஏஜெண்டுகளும் உபயோகிக்கும் ஒரு தூக்கியெறியப்பட்டு விட்ட மொழி, சுதந்திரத்தைப் பேணாது, அடக்குமுறைக்கும் கீழ்ப்படிதலுக்கும் வீரவணக்கம் செலுத்தும் மனிதர்களை உருவாக்கிவிட்டது. மொழியின் நுணுக்கம், இறுக்கம், அச்சத்தையும் அடிபணிதலையும் ஒதுக்கிசேவைசெய்யும் பணிவு ஆகிய பரிமாணங்களை உதறிவிட்டு அடிமையாக அதைப் புரளவைத்த பெருமை இந்த மொழிச் சிதைப்பாளர்களின் வெற்றி என்று கொண்டாடப்பட்டது.

அடக்கு முறையில் இயங்கும் மொழி வன்முறையைத் தூண்டவல்லது. அத்தகைய வன்முறை ஞானத்தை ஒடுக்குகிறது. அது இருட்டடிப்புச் செய்யும் அரசின் மொழி; போலித்தனம் மிக்க ஊடகங்களின் மொழி; பேராசிரியர்கள் சிரமப்பட்டு கடினமானதொன்றாக மாற்றித் தரும் மொழி; விஞ் ஞானத்தில் மாற்றம் பெற்ற தொழில் முறை மொழி; அறநெறி சிறிதும் இல்லாத வழக்குமன்ற மொழி; சிறுபான்மையோரைத் தூக்கி எறியும் மொழி; உதட்டளவில் இலக்கியமும் உள்ளத்தளவில் வெறுப்பும் கசடும் கலந்த வெறியுடன் வரும் மொழி - இவற்றை நாம் மறுத்து ஒதுக்க வேண்டும். மாற்றியமைக்க வேண்டும். வெளியுலகத்தின் முன்பு இவற்றை அம்பலப்படுத்த வேண்டும். மேற்சொன்ன குறைபாடுடைய மொழி உயிரின் இரத்தத்தைக் குடிக்கிறது. தீங்குகளை மடியில் போட்டுத் தாலாட்டுகிறது. தேசப்பற்றைத் தனது அகன்ற உடைக்குள் மறைத்து வைத்திருக்கும் பாசிசக் காலணிகளால் துளைத்தெடுக்க முயலுகிறது. அயராமல் மூளைச் சலவை செய்யும் பணியில் ஈடுபடுகிறது. பாலியல் மொழி, இனவெறி மொழி, ஆஸ்திக மொழி - இவை எல்லாமே அடக்குமுறைக்கு இணங்கி புதிய ஞானத்தையோ புதிய கருத்துக்களின் பரிமாற்றத்தையோ வெளி வராமல் தடுத்து ஆட்கொள்ளுகின்றன.

புத்திக்கூர்மையுள்ள கூலிப்படையினர், மனநிறைவு கொள்ளாத சர்வாதிகாரி, கொள்ளை அடிப்பதில் குறியாய் இருக்கும் அரசியல்வாதி / கும்பல் தலைவன், அடகு வைக்கப்பட்ட பத்திரிகையாளன் ஆகிய இவர்கள் அனைவரும் தன் கருத்துக்களால் ஈர்க்கப்பட மாட்டார்கள் என்று முதிய பெண்மணி அறிந்திருந்தாள். மால்கள், விசாரணை மன்றங்கள், தபால் அலுவலகங்கள், விளையாட்டு மைதானங்கள், படுக்கையறைகள், பெரும் நகரச் சாலைகள் ஆகிய இடங்களில் உள்ள மக்கள் வசம் ஆயுதங்கள் நிரம்பிக் கிடக்கும். அவர்களைக் கிளர்ச்சியூட்டும் வசனங்களினால் உண்மைகளை மறைத்து வரும் மொழியை விரும்ப வைப்பார்கள். வன்முறை, சூடு ஆகியவற்றைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடும் சாதுர்யமான மொழியைக் கையாளுவார்கள். வாத்துகளின் கழுத்தை நெரித்து அவற்றின் வாய் வழியே உணவைத் திணித்து அவற்றின் ஈரல்கள் பெரிதான பின் அந்த வாத்துகளை உணவாக மாற்றும் விதம் எல்லோரும் அறிந்ததுதான். இதையே பின்பற்றி பெண்களிடம் ஏதோ ஓர் இனிய உருமாற்றம் பெற்ற மயக்கு மொழியை முன்வைத்துத் தடுமாற்றமடையச்

செய்வார்கள். ஆராய்ச்சி என்ற பெயரில் புலன் விசாரணை செய்யும் மொழி முன் வந்து நிற்கும். அரசியல் சரித்திரம் என்னும் பெயர்களில் பல லட்சக்கணக்கான மக்களைத் துன்பத்துக்கு உள்ளாகி ஊமையாக்கி விடும் வல்லமை பொருந்தியவர்களாக இருப்பார்கள். திருப்தி அடையாத பிரகிருதிகளை மயக்கும் மொழியை உபயோகித்து அப்பிரகிருதிகள் தம் அண்டை வீட்டாரையே வெறுக்கக் கிளம்பி விடும் மோதலை ஏற்படுத்தி விடுவார்கள். கர்வம் மிக்க போலி மொழியைப் படைப்பாளிகள் மீது செலுத்தி அவர்கள் தங்களையே மட்டமாகவும் ஒன்றுக்கும் உதவாதவர்களாகவும் உணர வைத்து விடுவார்கள்.

சொற் சாதுர்யம், கவர்ச்சி, அறிஞர்களின் நட்பு என்ற மயக்கும் கவர்ச்சிகரமான குண நலங்களையும் மீறி அவற்றின் கீழே மொழியின் இயக்கம் ஒடுங்கிக் கிடக்கிறது. - அந்தப் பறவை ஏற்கனவே இறந்திருந்தால்.

எந்தத் துறையாகட்டும், அறிவாற்றல் கொண்டு விளங்கும் சரித்திரம், மேதைமை நிறைத்த சூழலை வளர விடாது தடுக்கும் புல்லுருவிகளின் வேகத்தைக் கட்டுப்படுத்தியும் கேள்வி கேட்டும் இயங்காவிடில் அது என்ன மாதிரியான நிலைமையை எதிர்கொள்ள வேண்டியிருக்கும் என்று அந்த முதியவள் நினைத்தாள். பாபல் கோபுரத்தின் வீழ்ச்சி துரதிஷ்டவசமானது என்பது பெரும்பாலோரின் கருத்து. பல்வேறு மொழிகளின் கனமும் அதனால் ஏற்பட்ட கவனச் சிதைவும் கோபுரக் கட்டமைப்பின் தோல்வியை ஏற்படுத்தின. ஒருசீரான மொழியமைப்பு, கட்டிடத்தைக் காப்பாற்றி சுவர்க்கத்தை அடைய வழிகோலியிருக்கும். யாருடைய சுவர்க்கம் என்று அவள் வியக்கிறாள். என்ன மாதிரியானது? மற்ற மொழிகளை மற்றவர்களின் கருத்துக்களை, மற்றவர்களின் காலகட்டத்தை அறிந்துகொள்ள சிறிது காலம் பயிற்சி எடுத்துக் கொண்டிருந்தால், அவசரப்பட்டு சுவர்க்கத்தை அடைய முயற்சித்திருக்க வேண்டியிருந்திருக்காது. அவ்வாறு அவர்கள் நடந்து கொண்டிருந்தால் அவர்கள் கற்பனை செய்து வைத்திருந்த சுவர்க்கத்தைக் தங்கள் காலடிகளில் கண்டிருக்கக் கூடும். சிக்கலானதும் பிடிவாதமானதுமான எண்ணம் - சுவர்க்கம் என்பது வாழ்க்கை என்று நினைத்ததுதான் - அது வாழ்க்கைக்குப் பின்னால் வருவது என்றறியாது இருந்ததினால்.

அவளைத் தேடி வந்தவர்கள் மொழி என்பது பலவந்தப்படுத்தி உலா வருவது என்ற எண்ணத்தைக் கொண்டிருந்தார்கள். அத்தகைய நோக்குடன் அவர்கள் அங்கிருந்து கிளம்புவதை அவள் விரும்பவில்லை. ஒரு மொழியின் உயிர்த்துடிப்பு அதை உபயோகிப்பவர்கள் - பேசுவோர், படிப்போர், எழுதுவோர் - மூலம் சித்திரம் தீட்டப்படுவது போல் விளங்க வேண்டும். அதன் நிதானம் பல சமயங்களில் அனுபவத்தின் மாற்றாக வெளிப்பட்டாலும் அது பதிலியாக விளங்க வாய்ப்பில்லை. உண்மைக்கு அருகாமையில் அர்த்தம் வெளிப்படாத போது மொழி வளைந்து முன்வந்து சரி செய்துவிடுகிறது. அமெரிக்கா ஒரு சுடுகாடாக ஆகிவிட்டது என்று நினைத்த அந்நாட்டின் குடியரசுத் தலைவர் ஒருவர், "இவ்வுலகம் நாம் என்ன சொல்கிறோம் என்பதையோ, நமக்கு நேர்ந்த அவலத்தையோ நினைக்காது. ஆனால், அவர்கள் என்ன செய்தார்கள் என்பதை அது மறக்காது" என்றார்.

அவருடைய சாதாரணமென்று தோன்றும் இவ்வார்த்தைகள் ஆழ்ந்த துக்கத்தை அடக்கியிருந்தது. ஆறு லட்சம் உயிர்கள் இனப் போராட்டப் பேரழிவில் இறந்து போனார்கள். இவ்வார்த்தைகள், நினைவுச் சின்னத்துக்காகவோ அலட்சியத்துடனோ உதிர்க்கப்படாமல், கனம் ஏற்றும் எந்த முயற்சியிலும் ஈடுபடாமல், கவனத்தைக் கலைக்காது வெளி வந்தன. அவை மிகுந்த மரியாதையுடன் வாழ்வின் கைப்பற்ற முடியாத பெருந் துயரத்தைச் சுட்டிக் காட்டின. இப்படிக் காண்பிக்கப்பட்ட மரியாதை முதியவளை ஈர்த்தது. வாழ்க்கையை மொழி ஒருக்காலும் ஈடுகட்ட முடியாது என்று அவள் நினைத்தாள். அப்படித்தான் இருக்க வேண்டும். அடிமைத்தனத்தையோ இன அழிப்பையோ போரையோ மொழி அடக்கியாள முடியாது. அது அம்மாதிரித் தன்னால் முடியும் என்ற அகந்தையைக் கொள்ளலாகாது. அதனுடைய வீச்சு, அதனுடைய சோபை விளக்கவொண்ணாத தருணத்தை அடையும் நிலையில் இருக்க வேண்டும்.

ஆளுமை மிக்க அல்லது பணிவுகொண்ட, ஆழப் புதைந்த, வெடித்துச் சிதறுகிற, புனிதத் தன்மையை ஏற்காத ஒன்றாக மொழி இருக்கலாம். அது பெரிதாகச் சிரிக்கலாம். அல்லது விசும்பலான அழுகையுடன் வெளிப்படலாம். கறைபடாத மொழியின் மௌனம் அறிவுச் செல்வத்தை நோக்கிப் பாய்கிறது; அழிவை நோக்கி அல்ல. ஓர் இலக்கியம் தடை செய்யப்படுவதற்குக் காரணம் அது எழுப்பும் கேள்விகள் என்பதை அறியாதவர் யாராவது உண்டா? அது விமரிசனத்தை ஏந்தி இருப்பதால் இகழப்படுகிறதா?. மாற்றுக் கருத்துக்களைக் கொண்டது என்பதால் அழிக்கப்படுகிறதா? நரம்பில்லாத நாக்கால் எவ்வளவு பேர் துன்புறுத்தப்படுகிறார்கள்?

வார்த்தை - வேலைப்பாடு என்பது கண்ணியம் மிக்கது என்று அவள் நினைக்கிறாள். ஏனெனில் அது உற்பத்தி ஸ்தானம். நமது வேறுபாடுகளை மனித விருப்பு வெறுப்புகளை அர்த்தப்படுத்துகிறது. நாம் இறக்கிறோம். வாழ்வின் அர்த்தம் இதில்தான் பொதிந்திருக்கிறது. நாம் மொழியை உருவாக்குகிறோம். நம் வாழ்க்கையின் அர்த்தமாக அது இருக்கலாம்.

"முன்பொரு காலத்தில்...." வந்தவர்கள் மூதாட்டியிடம் ஒரு கேள்வியை முன் வைக்கிறார்கள். யார் இந்தச் சிறார்கள்? அவர்கள் அவளிடம் வந்ததன்



நோக்கம் என்ன? "பறவை உங்கள் கைகளில் உள்ளதா?" என்ற கடைசி வரிகள் மூலம் எதை அறிந்தனர்? அது அவர்களைத் தெளிவுபடுத்தியதா? அல்லது மாட்டிவிட்டதா? ஒரு வேளை அந்தச் சிறார்கள் காதில் விழுந்தது: "இது என்னுடைய பிரச்சினை அல்ல. நான் வயதானவள். பெண், கறுப்பினத்தவள், கண் தெரியாதவள். இப்போது நான் அறிந்து கொண்டதெல்லாம் என்னால் உங்களுக்கு உதவ முடியாது என்பதைத்தான். மொழியின் எதிர்காலம் உங்கள் வசமுள்ளது."

அவர்கள் அங்கே நிற்கிறார்கள். அவர்கள் கையில் எதுவும் இல்லையோ? அவர்களின் வருகையே ஒரு தந்திரமோ? இதற்கு முன் வந்திராத இடத்தில் அவர்கள் பேசுவதைக் கேட்க வேண்டும் என்றும் அவர்கள் விளையாட்டுப் பிள்ளைகள் அல்ல என்றும் உணர்த்துவதற்காக இச்செய்கையில் ஈடுபட்டார்களோ? குறுக்கிட்டும்

பெரியவர்கள் உலகில் தங்களை முன்னிறுத்தியும் தங்களைப் பற்றி - தங்களிடம் அல்ல - பெரியவர்கள் கொண்ட தப்பிப்பிராயங்கள் சரியல்ல என்று வற்புறுத்தவா? அவசரமான கேள்விகள் அவர்கள் முன் நிற்கின்றன. உதாரணமாக, "எங்களிடம் இருக்கும் பறவை உயிருடன் இருக்கிறதா?" என்பது போன்று. உண்மையில் இக்கேள்வி அர்த்தப்படுவது, "வாழ்க்கையென்றால் என்ன என்று யாராவது சொல்கிறீர்களா? சாவு என்றால் என்ன?" இது ஏதோ தந்திரமாகவோ முட்டாள்தனமாகவோ கேட்கப்படவில்லை. ஒரு புத்திசாலியின் கவனத்தைக் கோரும் கேள்வி இது. வாழ்க்கையையும் சாவையும் எதிர்கொள்ளும் முதிர்ந்த புத்திசாலியான ஒருவர் பதிலளிக்காவிடில் வேறு யாரைத்தான் போய்க் கேட்பது?

ஆனால், அவள் பதில் தருவதில்லை. தன் ரகசியத்தைத் தனக்குள் வைத்துக்கொள்கிறாள். அவளுடைய கருத்து அவளுடனேயே இருந்துவிட்டுப் போகட்டும் என்று. அவளுடைய சுருக்கென்ற பேச்சு, சார்பற்ற நிலைப்பாடு, விலகியிருத்தல், தனிமையில் உறைந்திருத்தல், மேம்பட்ட தனித்த ஒரு வாசம்...

அவள் அறிவித்ததைத் தொடர்ந்து மேலும் ஒரு வார்த்தை வரவில்லை. அந்த மௌனம் ஆழமானது. சொல்லப்பட்ட வார்த்தைகளை மீறிய அர்த்தம் கொண்டது. இளைஞர்கள் எரிச்சலுடன் அந்தத் தருணத்தில் தமது மனதுக்குத் தோன்றும் வார்த்தைகளை வெளியிடுகிறார்கள்.

"பேசாமலிருப்பதால் நீங்கள் உங்கள் தோல்விகளை விவரிக்கும் வார்த்தைகளை ஒதுக்குகிறீர்கள். நீங்கள் சொன்னதையும் செய்ததையும் நாங்கள் மிகுந்த கவனத்துடன் பார்த்தாலும் அவை எதையும் அறிந்துகொள்ள விடவில்லை. பெருந்தன்மைக்கும் விவேகத்துக்கும் நடுவில் ஒரு சுவரை எழுப்பிவிட்டீர்கள்."

"எங்கள் கைகளில் உயிருடனோ இறந்தோ பறவை எதுவும் இல்லை. எங்களிடம் இருப்பது நீங்கள்தான். உங்களிடம் எங்களுக்கான கேள்வி: எங்கள் கைகளில் ஒன்றும் இல்லை என்பதை உங்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லையா? உங்களால் ஊகிக்கக் கூட முடியவில்லையா? உங்களது இளமைக் காலத்தில் மொழி என்பது ஒரு மாஜிக் போலத் தோன்றியது உங்களுக்கு நினைவில்லையா? கண்களுக்குப் புலப்படாததைக் கற்பனை தூக்கி

நிறுத்திக் காட்டியதே? கேள்விகளும் கோரிக்கைகளும் பதில்களைத் தரும்படி வேண்டி நின்ற போது பதில் உங்களிடம் இல்லை என்று கோபப்பட்டீர்களே?

எங்கள் பிரக்ஞையை அடைய உங்களைப்போன்ற கதாநாயகிகளும் கதாநாயகர்களும் மேற்கொண்ட சண்டையை நாங்களும் ஆரம்பிக்க வேண்டுமா? உங்கள் சண்டையின் இழப்பினால் எங்கள் வசம் இப்போது எதுவுமில்லை. உங்கள் கற்பனைதான் மிச்சம். உங்கள் பதில் கலைத்தன்மையுடன் இருக்கிறது. ஆனால், அந்தக் கலைத்தன்மை எங்களை மட்டுமில்லை, உங்களையும் அவமானமாக உணரச் செய்கிறது, உங்களின் பதிலில் உள்ள தற்பெருமை மிக ஆபாசமாக இருக்கிறது. எங்கள் கைகளில் எதுவும் இல்லாத போது நீங்கள் காண்பிப்பது தொலைக்காட்சிக்காகத் தயாரிக்கப்பட்ட பொருளற்ற எழுத்துப் பிரதிதான்.

எங்களை நெருங்கி, உங்கள் மென்மையான விரல்களால் வருடி, நாங்கள் யாரென்று அறியும் வரை எந்தவித அறிவுரையும் தராமல் மௌனமாக இருந்தால் என்ன? நாங்கள் ஆடிய நாடகம் உங்கள் கவனத்தைப் பெறுவதற்காக ஆடியது. நாங்கள் இளையவர்கள். முற்றாத பிஞ்சுகள். எங்களின் இந்நாள் வரையிலான குறைந்த வாழ்க்கையில் எங்களிடம் சொல்லப்பட்டதெல்லாம் 'பொறுமையாய் இரு' என்பதுதான். இன்று பேரழிவை நோக்கிச் செல்லும் இவ்வுலகில் இதற்கு என்ன அர்த்தம்? கவிஞன் ஒருவன் சொன்னது போல், "வெறுங் கையால் முழம் போடுவதில் அர்த்தமில்லை." எங்கள் பாரம்பரியம் என்பது அவமதிப்பைத் தரும் ஒன்று. நீங்கள் உங்களுடைய வயதான வெளிறிய கண்களால் நாங்கள் பெற்ற வதையையும் திறமை மங்கி சாதாரணத்துடன் வளைய வருவதையும் பார்த்து நின்று கொண்டிருக்க வேண்டுமா? தேசியம் என்ற பொய்ச் சரடை அணிந்துகொண்டு எங்களையே ஏமாற்றிக்கொள்ளும் முட்டாள்களாக நாங்கள் வலம் வர வேண்டுமா? சென்ற காலம் என்னும் நஞ்சு கலந்த நீரில் நாங்கள் இடுப்பு வரை நிற்கையில் எங்களிடம் கடமை என்று போதனை செய்ய உங்களுக்கு எவ்வளவு தைரியம் இருக்க வேண்டும்?

நீங்கள் எங்களைச் சிறுமைப்படுத்துகிறீர்கள். எங்கள் கைகளில் இல்லாத பறவையையும். எங்கள் வாழ்க்கைக்கான அர்த்தம் எங்கு உள்ளது? பாடல், இலக்கியம், கவிதை என்னும் வைட்டமின்கள் எதுவுமில்லாது வாழ்க்கையுடன் சம்பந்தமில்லாத சரித்திரத்தைக் காட்டி எங்களைப் பலசாலியாக்கி விடலாம் என்று எண்ணுகிறீர்களா?

நீங்கள் வயதானவர். புத்திசாலியான பெண்மணி. உங்களைத் தற்காத்துக்கொள்ள முயல வேண்டாம். எங்களது உயிர்களைப் பற்றி யோசியுங்கள். உங்களின் உலகைப் பற்றிக் கூறுங்கள். ஒரு கதையைப் போல. தீவிரமான கதை உருவாக்கப்படும் போது நாங்களும் உருவாக்கப்படுகிறோம். உங்கள் புரிதல் சவாலுக்கு இலக்காகும் போது நாங்கள் உங்களை அதற்காகப் பழிக்க மாட்டோம். உங்கள் வார்த்தைகள் சூடேற்றப்பட்டு விட்டால் அவை தீக்கிரையாகி தீப்புண் மட்டுமே மிஞ்சும். அறுவைச் சிகிச்சை மருத்துவரின் திறமையான கைகளை போல் உங்கள் வார்த்தைகள் ரத்தக்காயம் இருக்கும் இடங்களில் தையல் போடும். எங்களுக்குத் தெரியும் உங்களால் எப்போதுமே சரிவரச் செய்ய முடியாது என்று.

மனவெழுச்சி எப்போதும் போதுமானதாக இருப்பதில்லை. திறமை கூட அப்படித்தான். ஆனால், முயலுங்கள். உங்களுக்காகவும் எங்களுக்காகவும் செய்யுங்கள். தெருவெங்கும் உங்கள் பெயர் முழங்க வேண்டும் என்னும் நினைப்பைத் தவிருங்கள். உலகின் இருட்டானதும் வெளிச்சமானதுமான பகுதிகளில் எவற்றைக் காண்கிறீர்கள்? 'இதை நம்பு, இதற்குப் பயப்படு' என்றெல்லாம் சொல்ல வேண்டாம். நம்பிக்கை என்னும் விரிந்த அழகான குட்டைப் பாவாடையைக் காண்பியுங்கள். அச்சத்தை மூடி மறைக்கும் அழுத்தச் சமனத்தகடை நீக்கிக் காண்பியுங்கள். கண் பார்வையற்ற வயதான மூதாட்டியே, உங்களின் வசமிருக்கும் மொழியைப் பயன்படுத்தி மொழியால் செய்ய முடிவதெல்லாம் என்னென்னவென்று விளக்குங்கள். பயமுறுத்தும் பெயரில்லாத விஷயங்களைப் பற்றி மொழி ஒன்றுதான் விளக்கம் தர வல்லது. மொழிதான் தியானம்.

பெண் என்றால் எப்படி இருக்க வேண்டும் என்று எங்களுக்குச் சொல்லித் தாருங்கள். அதன் மூலம் ஆண் எப்படி இருக்க வேண்டும் என்று நாங்கள் அறிந்துகொள்கிறோம். விளிம்பில் நகர்வது எது? இந்தப் பிரதேசத்தில் வீடற்று இருப்பது என்பது எப்படி இருக்கும்?

நீங்கள் அறிந்தவற்றிலிருந்து திசைமாற்றம் நிகழ்வது உவப்பானதா? உங்களை விரும்பாத இடங்களுக்குச் சென்று வாழ்வது எப்படியிருக்கும்?

ஈஸ்டரின் போது கடற்கரையோரங்களை அணுக விடாமல் தடுக்கப்படும் கப்பல்கள், தரையில் கிடக்கும் சூல்கொடி ஆகியவற்றைப் பற்றிக் கூறுங்கள். பெரும் சாமான்களை அடைத்து வைக்கப்படும் வேகன் பெட்டிகளில் அடைபட்டுக் கிடக்கும் அடிமைகள், அவர்கள் மென்குரலில் பாடும் பாடல்கள் நினைவுறுத்தும் பனிப்பொழிவு பற்றிச் சொல்லுங்கள். இந்த அடிமைகள் இறங்க வேண்டிய அடுத்த இடம்தான் அவர்களுடைய இறுதி நிறுத்தம் என்பதை அவர்கள் எப்படி அறிந்தார்கள்? எப்படி அவர்கள் தங்கள் கைகளைக் கூப்பி பிரார்த்தனை செய்கையில் இறங்கும் உஷ்ணத்தையும் சூரியனையும் நினைக்கிறார்கள்? தலையை உயர்த்தி அவர்கள் நிமிர்ந்து பார்க்கையில் தங்கள் முகத்தைத் தூக்கிக் கொடுப்பதுபோலக் காணப்படுவதேன்? அவர்கள் ஒரு விடுதியின் முன் சென்றடைகிறார்கள். டிரைவரும் சக

ஊழியரும் விளக்கை எடுத்துக் கொண்டு விடுதியின் உள்ளே செல்ல இந்த அடிமைகள் இருட்டில் மெல்லிய குரலில் பாடலை இசைக்கிறார்கள். குதிரைக் குளம்புகள் பனியைத் துழாவி ஆவியைக் கிளப்புகின்றன. அப்போது எழும் ஒலியும் உருகலும் குளிரில் உறைந்து கிடைக்கும் அடிமைகளை மயக்குகின்றன.

“விடுதியின் கதவு திறக்கிறது. வெளிச்சத்திற்குச் சற்றுத் தள்ளி ஒரு பையனும் பெண்ணும் நிற்கிறார்கள். வேகனுக்குள் வந்து படுக்கையில் அமர்கிறார்கள். இப்போது கையில் விளக்கும் ஆப்பிள் ரசக் குடுவையும் ஏந்தியிருக்கும் அவன் இன்னும் மூன்று ஆண்டுகளில் துப்பாக்கியைப் பிடித்திருப்பான். அடிமைகளின் வாயில் அவர்களிருவரும் ஆப்பிள் ரசத்தை ஊற்றுகிறார்கள். ரொட்டியும் மாமிசத் துண்டும் தவிர அந்தப் பெண் தரும் இன்னொன்று: அவள் அளிப்பதை பெற்றுக்கொள்ளும் அடிமையின் பார்வையை. ஆண்களுக்கு ஒரு ஈடும் பெண்களுக்கு இரண்டு ஈடுகளும் தருகிறாள். அடுத்த நிறுத்தம்தான் அவர்களது கடைசி இடம். இப்போது நின்றிருக்கும் இடமல்ல என்பது ஆதரவைத் தரும் உணர்வைக் கொண்டதாக இருக்கிறது.”

இளைஞர்கள் பேச்சை நிறுத்தி விட மௌனம் சூழ்கிறது. அதை உடைத்துக் கொண்டு முதியவள் பேசுகிறாள்:

“இறுதியாக நான் உங்களை இப்போது நம்புகிறேன். நீங்கள் கைப்பற்றிய பறவை உங்கள் கைகளில் இல்லை என்பதை நம்புகிறேன். இது எவ்வளவு அழகாயிருக்கிறது - நான் இருவரும் சேர்ந்து உருவாக்கியிருப்பது!”

“ஸிந்துஜா” <weenvy@gmail.com>

# டவுன் சைசிங்

## பூமிக்கு பாரமாகிவிடாது ஐந்து இஞ்சு மனிதனாவது எப்படி?

### சுப்ரபாரதிமணியன்

புவி சூட்டின் காரணமாக பூமி பலவகை அழுத்தங்களை சந்தித்து வருகிறது. மக்கள் தொகை பெருக்கமும் பூமி சூடும் இன்னும் பல பிரச்சினைகளை எழுப்பக்கூடும். அந்த வகையில் பூமிக்கு அழுத்தம் தராமல் இருக்க அல்லது அழுத்தத்தை குறைக்க மக்கள் தொகையை குறைக்க வலியுறுத்துகிறார்கள். மனிதர்களின் உருவத்தை ஐந்து இன்ச் என்ற அளவில் குறைத்துவிட்டால் பூமி மீது அவர்கள் பாதம் படும் அழுத்தமும் அவர்களின் இருப்பும் பூமிக்கு பாரமாகிவிடாது என்ற சுற்றுச்சூழல் சார்ந்த ஒரு கற்பனை 'டவுன் சைசிங்' என்ற படத்தில் வெளிப்பட்டு இருக்கிறது.

விஞ்ஞான புனைவு நகைச்சுவை படமாக இதை சொல்லலாம். இதில் வருகிற பால் என்ற தெரபிஸ்ட் தன்னை உருவத்தில் குறுகிக்கொள்ள ஆசைப்படுகிறார். ஐந்து இன்ச் அளவில் குறைந்தால் நல்ல வாழ்க்கை இருக்கும் என்று வேறு சிலருக்கும் ஆசை ஏற்படுகிறது. ஆனால், அது அவ்வளவு தொந்தரவுகளை தருகிறது.

பொருளாதார சிக்கலில் எப்போதும் இருப்பவர், பால். இந்த சூழலில் இருந்து விடுபட தன் உருவத்தை சுருக்கிக்கொண்டால் பணம் கிடைக்கலாம் என்ற நப்பாசை ஏற்படுகிறது. மனைவியுடன் சேர்ந்து யோசிக்கிறார். சரி என்று திட்டத்தை தொடங்குகிறார்கள். ஆனால், அவரை மருத்துவமனைக்கு கொண்டுசென்று, பரிசோதனை முடிந்து, அவர் ஓய்வெடுக்கிற போது, மனைவி வெளியில் இருந்து,



"வந்துவிடுங்கள், வேண்டாம் நமக்கு இருக்கிற வாழ்க்கை போதும்" என்று பதற்றப்படுகிறார். அவர் தன்னை உருவத்தில் சிரித்துக்கொள்ளும் சிறிதாக்கிக்கொள்ளும் வேளையில் தொடர்ந்து இருக்கிறார். அவர் மனைவி பிடிக்காமல் விவாகரத்துக் கொள்கிறார். விவாகரத்துக்காக சொத்தினுடைய பெரும்பங்கு அவருக்கு போய்விட சின்ன சின்ன வேலைகள் செய்து பால் பிழைக்க வேண்டி இருக்கிறது.

பால், பேருந்தில் பயணம் செய்யும்போது இந்த வகை உருவம் குறைந்தவர்களை இணையாக பார்ப்பது அவருக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

பூமியில் மனிதன் இதே வேகத்தில் சென்றுகொண்டே இருந்தால், மக்கள் தொகை பெருகிக்கொண்டு இருந்தால், பூமியில் மனிதன் நிற்க முடியுமா என்ற விவாதம் தொடர்ந்து கொண்டிருக்கிறது. தூக்க மாத்திரை இல்லாமல் தூங்கும் மனிதர்கள் குறைந்து போய்விட்டார்கள். பிரச்சினை அதிகமாகிக் கொண்டிருக்கிறது. மனிதர்களை குறைக்க வேண்டும் அல்லது அவர்களை குறுக்க வேண்டும் என்று நடவடிக்கைகள் தொடர்கின்றன.

கண்ணாடிக்குள் இருவர் குறை உருவங்களுடன் படத்தின் ஆரம்பத்தில் வருகிறார்கள். 'கனவுகளின் வீடு' என்று அவர்கள் இருக்கும் பகுதி சொல்லப்படுகிறது. சிறிய உருவத்தில் இருப்பவர்களுக்கான உணவு பொருட்கள், பீர் போன்ற

(தொடர்ச்சி 45ஆம் பக்கம்)

# தமிழ் வளர்ச்சித் துறை விருதுகள்





தமிழுக்கும் தமிழ்மொழி, பண்பாட்டு வளர்ச்சிக்கும் தொண்டாற்றி வருவோருக்கு ஆண்டு தோறும் விருது வழங்கி கௌரவிக்கிறது, தமிழ் வளர்ச்சித் துறை. அவ்வகையில், 2022-ஆம் ஆண்டுக்கான சிறந்த மொழிபெயர்ப்பாளர், தமிழ்ச் செம்மல் உள்ளிட்ட பல்வேறு விருதுகள் வழங்கும் விழா சென்னையில் 22-02-24 (வியாழக்கிழமை) நடைபெற்றது. இதில், தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சார் மு.பெ. சாமிநாதன் கலந்து கொண்டு விழாவில், 2022ஆம் ஆண்டுக்கான சிறப்பு விருதுகளை 15 பேருக்கும், சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதுகளை 10 பேருக்கும், தமிழ்ச்செம்மல் விருதுகளை 38 பேருக்கும் ஆக 63 பேருக்கு விருதுகளை வழங்கினார்.

தமிழ்த் தாய் விருது - திருப்பூர் தமிழ்ச் சங்கத்துக்கு வழங்கப்பட்டது. இத்துடன் விருதுத் தொகை ரூ. 5 லட்சம், கேடயம், தகுதியுரை, பொன்னாடை ஆகியவை வழங்கப்பட்டன.

சி.பா. ஆதித்தனார் திங்களிதழ் விருது - முல்லைச்சரம் இதழுக்கு (ஆசிரியார் - பொன்னடியான்) வழங்கப்பட்டது. இத்துடன் விருதுத் தொகை ரூ. 2 லட்சம், கேடயம், தகுதியுரை, பொன்னாடை ஆகியவை வழங்கப்பட்டன.

உ.வே.சா விருது - நாறும்பூநாதன், அருட்பெருஞ் சோதி வள்ளலார் விருது - ப. சரவணன், ஜி.யு. போப் விருது - அமுதன் அடிகள், அயோத்திதாசப் பண்டிதர் விருது - வை.தேசிங்குராசன், கபிலர் விருது - அமிர்த கௌரி, கம்பர் விருது - மா. இராமலிங்கம், சொல்லின் செல்வர் விருது - தி.இராசகோபாலன், உமறுப்புலவர் விருது - பீ.மு.அஜ்மல்கான், இளங்கோவடிகள் விருது - கூ.வ.எழிலரசு, அம்மா இலக்கிய விருது - தி.பவளசங்கரி, சிங்காரவேலர் விருது - நா.சு.சிதம்பரம், மறைமலையடிகளார் விருது சு.நரேந்திரன், காரைக்கால் அம்மையார் விருது - த.வசந்தாள் ஆகியோருக்கு வழங்கப்பட்டன. விருது பெற்ற இந்த 13 பேருக்கும் தகுதியுரை, பொன்னாடை, தலா ரூ. 2 லட்சம், தலா ஒரு பவுன் தங்கம் ஆகியவை வழங்கப்பட்டன.

சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருது சுப்ரபாரதிமணியன், அ.ஸ்டீபன் அருள்ராஜ், தி.வே.விஜயலட்சுமி, அரு.சோமசுந்தரன், சிவகுருநாத பிள்ளை, பி.எஸ்.பி. குமாரசாமி, ப.சந்திரசேகரன், மெய்ஞானி பிரபாகர பாபு, முது ஆ. இராசமாணிக்கம், கே. தட்சிணமூர்த்தி ஆகிய 10 பேருக்கு வழங்கப்பட்டது. இத்துடன் விருதுத் தொகை தலா ரூ.2 லட்சம், தகுதியுரை, பொன்னாடை ஆகியவையும் வழங்கப்பட்டன.

தமிழ்ச் செம்மல் விருது உதயசங்கர் உட்பட மாவட்டத்துக்கு ஒருவர் வீதம் மொத்தம் 38 பேருக்கு வழங்கப்பட்டது. இந்த விருதுடன் தகுதியுரை, விருதுத் தொகை தலா ரூ. 25,000 ஆகியவை வழங்கப்பட்டன.

நிகழ்ச்சியில், தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை செயலர் சுப்பிரமணியன், தமிழ் வளர்ச்சித்துறை இயக்குனர் அருள் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

விருதாளர்களுக்கு அம்ருதாவின் வாழ்த்துகள். ●

(42ஆம் பக்கத் தொடர்ச்சி)



மதுபானங்கள் போன்றவையும் சிறிய அளவில் உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்த பரிசோதனையில் தன்னை ஒருவர் உருவத்தில் சிதைத்துகொள்ளும் விஷயத்தில சில சமயம் பெரிய பாதிப்பு ஏற்படலாம். சில சமயம் சாவு ஏற்படலாம். ஆனால், அதை எதிர்பார்த்துதான் பால் போகிறார்.

உயரம் குறைந்துப் போகிறது. ரோஜா மலர் பெரிதாக அமைதியின் குறியீடாக இருக்கிறது. பரிசோதனை முடிந்து வெளியே வருகிறார். யானி என்ற முதல் முதலில் உருவாக்கப்பட்ட ஒரு பையன் இப்போது வளர்ந்து இருக்கிறான். சிறியவை அழகு என்று திரும்பத் திரும்ப சொல்லப்படுகிறது. பெண் ஒருத்தியின் கதை வேறு. சிறிய ஆள் ஆகும்போது கணவர் இறந்து போகிறார். மனைவியும் சிதைந்து நிரந்தர படுக்கையில் இருக்கிறாள். இப்படி ஒரு கதாபாத்திரம் படம் முழுக்க வருகிறது. அந்த பெண்ணை கவனித்துக்கொள்ளும் வியட்நாம் பெண்ணொருத்திக்கு கால்கள் ஊனமானவை. அமெரிக்கா ஓடி வந்து அங்கு வீட்டை சுத்தம் செய்யும் வேலைகளில் இருக்கிறாள். அவளுக்கு பால் அறிமுகமாகி உதவி செய்கிறார். அவளின் கால் ஊனத்தை சரி செய்வதற்காக உதவுகிறார். நட்பு ஏற்படுகிறது. உலகை சுருக்க வைத்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்கிறார்கள்.

ஒரு குகைக்குள் போனால் மீண்டும் அவர்கள் குள்ளர்களாக மாறிவிடுவார்கள். வியட்நாம் பெண்ணும் பாலும் பயணப்படுகிறார்கள். அங்கு புதிய உலகத்தை எல்லாம் பார்க்கிறார்கள். ஆனால், அதற்கு உள்ளே போய்விட்டால் வெளியே வர முடியாது. உருவம் சிறுத்துப் போய்விடும். அந்த ஊனமுற்ற பெண்ணிடம், தொடர்ந்து செயல்படுவது, அவள் அங்கு இருக்கும் போது மனித உரிமைகளுக்காக போராடியது, சிறைக்கு சென்றது, கால்கள் சிறுத்துப் போனது போன்றவற்றை பற்றி எல்லாம் சொல்கிறார்.

இயற்கைக்கு மாறாக சுருக்கிக்கொள்வது என்பது சிரமமாகத்தான் இருக்கிறது. ஆனால், அப்படி ஒரு வாழ்க்கை நன்றாக இருக்கும் என்று சிலருக்கு கற்பனை இருந்துகொண்டே இருக்கிறது. இன்னும் ஒரு புது உலகத்தில் நுழைந்தால் அவர்கள் சிறு உருவங்களாக மாறிவிடலாம். ஆனால், நீக்ரோ பெண் அவளுடைய அன்பை வெளிப்படுத்தி பாலை அதிலிருந்து வெளியே கொண்டு வருகிறார்.

பெரிய கனவுகளை நாம் உருவாக்கி அதை நிறைவேற்ற வேண்டும் என்று அவர்கள் எண்ணம் வருகிறது. சுற்றுச்சூழல் பாதிப்பும் உண்மையின் மீது தரப்படும் அழுத்தங்களும் எப்படி சிரமமாக இருக்கின்றன; அதை தாண்டி மனிதர்கள் தங்களுடைய உருவங்களை சுருக்கிக்கொண்டால் அது பாரத்திற்கு கூட மாற்றாக இருக்கும் என்று கருத்துக்கள் வைக்கப்படுகிறது.

சுற்றுச்சூழல் சார்ந்து புவி சூடு, பூமியின் தாங்க முடியாத இன்றைய சிரமம் பற்றி இந்த படம் பேசுகிறது. அதற்கு மாற்றான நடவடிக்கைகள் எப்படி அமைந்து மனித குலத்தை இன்னொரு எல்லைக்கு கொண்டு செல்கிறது என்ற கற்பனையும் இதில் இருக்கிறது.

சுப்ரபாரதிமணியன் <subrabharathi@gmail.com>

# ஒரு புதிய தொகுப்புக்கான கனவு

## பாவண்ணன்

ஜெயகாந்தன் எழுதிய 'ரிஷிமூலம்' என்னும் நெடுங்கதை எழுபதுகளில் தினமணி கதிரில் தொடராக வெளிவந்தது. நான் அப்போது உயர்நிலைப் பள்ளி மாணவன். எங்கள் அப்பாவின் நண்பருடைய மகன் எங்கள் ஊர் நூலகத்தில் பணியாற்றி வந்தார். அந்த நெருக்கத்தின் விளைவாக நீண்ட நேரம் நூலகத்திலேயே உட்கார்ந்து எல்லா வார, மாத இதழ்களையும் எடுத்துப் படிப்பேன். ஒவ்வொரு வார, மாத இதழிலும் கதைகளுக்காகவும் நகைச்சுவைகளுக்காகவும் தீட்டப்பட்ட எல்லா ஓவியங்களையும் நிறுத்தி நிதானமாகப் பார்ப்பேன்.

எனக்குப் பிடித்த ஓவியத்தைப் பார்த்து என் நோட்டில் அப்படியே வரைந்துகொள்வேன். அந்தக் காலத்தில் அது ஒரு பொழுதுபோக்கு. என் நண்பர்களுக்கு அவற்றைக் காட்டி மகிழ்வேன். சிலர் தம் நோட்டிலும் அந்த ஓவியங்களை வரைந்து கொடுக்குமாறு கேட்பார்கள். அவர்கள் கேட்கும் ஓவியத்தை அவர்களுடைய ஆசையை நிறைவேற்றும் விதமாக வரைந்துகொடுப்பேன். ஓவியர்கள் கோபுலுவும் ராமுவும் வரைந்த ஓவியங்கள் எனக்கு மிகவும் பிடிக்கும். பார்த்தவுடனே வரையத் தூண்டும் ஓவியங்கள் அவை.

'ரிஷிமூலம்' கதைக்கு கோபுலு ஓவியம் தீட்டியிருந்தார். ஒவ்வொரு வாரமும் அந்தக் கதைக்காகவும் ஓவியத்துக்காகவும் தினமணி கதிருக்காகக் காத்திருப்பேன்.

ஒருநாள் விட்டல்ராவின் புத்தக அடுக்கில் பைண்டிங் செய்யப்பட்ட ஒரு தடிமனான தொகுப்பைப் பார்த்தேன். அதை எடுத்துப் பிரித்தேன். தினமணி கதிரில் அந்தக் காலத்தில் அவர் எழுதி வெளிவந்த கதைகளைக் கொண்ட பக்கங்களை மட்டும் கத்தரித்து எடுத்து ஒரு தொகுப்பாக பைண்டிங் செய்து வைத்திருந்தார் விட்டல்ராவ். 1973, 74, 75 காலகட்டத்தில் அவர் எழுதிய கதைகள். அவருடைய கதைகளுக்கு முன்னால் ஜெயகாந்தனின் 'ரிஷிமூலம்' கதையின் பக்கங்கள் வைக்கப்பட்டிருந்தன. மூன்று வாரத் தொடராக வெளிவந்த அத்தியாயங்கள் வரிசையாக இருந்தன. முதல் பக்கத்திலேயே எனக்கு மிகவும் பிடித்த கோபுலுவின் ஓவியம். மேசையின் மீது புத்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு குனிந்து படிக்கும் ஒரு மாணவனின் படம். நான் அந்த ஓவியத்தையே நெடுநேரம் கண்கொட்டாமல் பார்த்தபடி இருந்தேன். அந்த ஓவியத்தைப் பார்த்து ஓவியமெழுதப் பழகிய பழைய நாட்கள் என் மனத்தில் நிழலாடின. என் விரல்கள் என்னை அறியாமலேயே வெட்டவெளியில் அந்த மாணவனின் உருவத்தைத் தீட்டத் தொடங்கிவிட்டன.



"அந்த படத்தையே வைச்ச கண்ண எடுக்காம பார்த்துட்டே இருக்கீங்களே? அதுல அப்படி என்ன விசேஷம்?" என்று கேட்டார் விட்டல்ராவ்.

நான் என் மனத்தில் பொங்கியபடி இருக்கும் பழைய காலத்து நினைவுகளை அவரிடம் விரிவாகச் சொன்னேன். அவர் பொறுமையோடு எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டார்.

பக்கங்களைப் புரட்டிப் புரட்டி நான் அத்தொகுதியில் இடம்பெற்றிருக்கும் கோபுலுவின் பிற ஓவியங்களையே பார்த்தபடி இருந்தேன். தலைக்கு கையை முட்டுக்கொடுத்து கால் மீது கால் போட்டபடி ஒருக்களித்துப் படுத்திருக்கும் சாமியார், குடைகளை விரித்துப் பிடித்தபடி நடந்து போகும் இரு நடுவயது மனிதர்கள் என ஒவ்வொன்றையும் பார்க்கப் பார்க்க மகிழ்ச்சியாக இருந்தது. "வீட்டுக்கு எடுத்துச்சென்று ஒருமுறை நிதானமாகப் பார்த்துவிட்டு கொடுக்கட்டுமா சார்?" என்று விட்டல்ராவிடம் கேட்டேன். "தாராளமா எடுத்துட்டு போங்க" என்று உடனடியாக சம்மதத்தைத் தெரிவித்தார் அவர்.

வீட்டுக்கு வந்ததும் அன்றிரவு அந்தப் படங்களை மீண்டும் புரட்டிப் பார்த்தேன். பழைய பால்யகால


கமலாராவ்

நினைவுகள் மூண்டெழ ஒரு வெள்ளைத்தாளில் அந்தப் படங்களைப் பார்த்து வரையத் தொடங்கினேன். பள்ளிக் காலத்துக்குப் பிறகு நான் ஓவியப் பயிற்சியைத் தொடரவில்லை. வருமோ வராதோ என்றொரு ஐயம் ஆழ்மனத்தில் இருக்கத்தான் செய்தது. ஆனாலும் ஆசையின் காரணமாக வெட்கத்தைவிட்டு வரையத் தொடங்கினேன். ஆனால், சிறிது நேரத்திலேயே தினமணி கதிர் ஓவியத்தில் இருந்த மனிதர்கள் என்னுடைய தாளில் இடம்பெயர்ந்து உட்கார்ந்துவிட்டனர். கிட்டத்தட்ட கோபுலுவின் சாயலைக் கொண்டுவந்துவிட்டேன் என்பதில் என் மனம் நிறைவாக உணர்ந்தது.

ஓவியங்களைத் தொடர்ந்து அந்தக் கதையையும் படித்தேன். கதையின் மொத்த சாரமும் ஒரு கேள்வியாகத் திரண்டெழுந்து நெஞ்சில் மோதியது. அடுத்தநாள் காலையில் ஜெயகாந்தன் கதையைத் தொடர்ந்து அடுத்தடுத்து இணைக்கப்பட்டிருந்த விட்டல்ராவின் கதைகளைப் படிக்கத் தொடங்கினேன். பல கதைகளை அப்போதுதான் நான் முதன்முறையாகப் படித்தேன்.

’பாசம் பிரிவதுஇல்லை’ என்னும் தலைப்பில் இரு சகோதரர்களைப் பற்றிய சிறுகதையொன்று இருந்தது. அதற்கு ஓவியர் ஜெயராஜ் ஓவியம் வரைந்திருந்தார்.

செல்வநாதன், மகிமைநாதன் இருவரும் சகோதரர்கள். பாளையங்கோட்டை பக்கத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால், இருவருக்கும் இடையில் நல்ல உறவு கிடையாது. பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த ஒரு நிகழ்ச்சியால் உறவு முறிந்துவிட்டது. மகிமைநாதன் வாட்சுகள், எலெக்ட்ரானிக் பொருட்கள், மதுப்புட்டிகள் என அயல்நாட்டுப் பொருட்களை ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குக் கடத்திச் சென்று விற்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறான். அந்த விவகாரம் எதுவும் செல்வநாதனுக்கோ, குடும்பத்தில் இருக்கும் மற்றவர்களுக்கோ தெரியாது. ஒருநாள் தம்பி செல்வநாதனை காரில் தன்னோடு அழைத்துக்கொண்டு எங்கோ புறப்பட்டுச் செல்கிறான் மகிமைநாதன். எந்த இடத்துக்குச் செல்லப் போகிறோம் என்று கேட்காமலேயே சகோதரனை நம்பி அவனோடு செல்கிறான்.

வழியில் ஒரு லெவல் க்ராஸிங் வருகிறது. தம்பியை காரிலேயே உட்கார்ந்திருக்கும்படி சொல்லிவிட்டு மகிமைநாதன் அங்கிருந்து புறப்பட்டுச் செல்கிறான். தற்செயலாக அங்கு சோதனைக்கு வந்து காவல்துறையினர் வண்டிக்குள் வைக்கப்பட்டிருந்த கடத்தல் பொருட்களைப் பார்த்துவிட்டு வண்டியில் இருந்த செல்வநாதனைக் கைது செய்துகொண்டு அழைத்துச் சென்றுவிடுகிறார்கள். நீதிமன்றத்தில் தண்டிக்கப்பட்டு சிறையில் அடைக்கப்படுகிறான் செல்வநாதன். தண்டனைக் காலம் முடிந்து விடுதலை பெற்றவனை வீடு ஏற்றுக்கொள்ள மறுக்கிறது. குடும்பப் பெருமையைக் குலைத்தவன் என்ற எண்ணத்தில் அவனுடைய தந்தை அவனை குடும்பத்தைவிட்டு வெளியேற்றிவிடுகிறார். அன்று வைராக்கியத்தோடு வீட்டைவிட்டு வெளியேறியவன் சென்னைக்கு வந்து பத்தொன்பது ஆண்டுகளாகப் பாடுபட்டு தன் வாழ்க்கையை ஒரு நல்ல நிலைக்கு உயர்த்திக்கொள்கிறான். ஆனால், யாரோடும் உறவு பாராட்டாமல் தனித்தே வாழ்கிறான்.

இளமையிலேயே பாதை மாறிவிட்ட அவனுடைய மூத்த சகோதரனோ மீண்டும் திரும்பமுடியாத அளவுக்கு அதே பாதையில் வெகுதொலைவு சென்றுவிடுகிறான். சென்னை தெருவில் நடந்து கொண்டிருந்த சமயத்தில் பத்தொன்பது ஆண்டுகளாக பார்க்காத சகோதரனை தற்செயலாகப் பார்த்துவிட்டு சிறிது இடைவெளியோடு அவனைப் பின்தொடர்ந்து வந்து, அவன் சென்ற அதே அலுவலகத்துக்குள் நுழைகிறான். அவனை வரவேற்பறையிலேயே தடுத்து நிறுத்திய அந்த நிறுவனத்தின் உதவியாளர் தொலைபேசி வழியாக தன் மேலாளரிடம் அண்ணன் என்று சொல்லிக்கொண்டு ஒருவர் வந்திருப்பதாகத் தெரிவிக்கிறாள். ஒருகணம் உறைந்துவிடும் தம்பியின் நெஞ்சில் பழைய நினைவுகள் நிழலாடுகின்றன.

செல்வநாதன் அறையை விட்டு வெளியே வந்த மகிமைநாதனைச் சந்திக்கிறான். அவனுடைய அழுக்குக் கோலத்தைப் பார்த்து ஒருபுறம் சங்கடமாகவும் இன்னொருபுறம் குரூர திருப்தியாகவும் உணர்கிறான். காரணமே இல்லாமல்

சிறைத்தண்டனையை ஏற்றுக்கொள்ள வைத்தவன் என்கிற எண்ணத்தையோ, அவன் மீது கொண்ட கோபத்தையோ அவனால் மாற்றிக்கொள்ளவே இயலவில்லை. வெளியே அழைத்துச் சென்று அவனுக்கு மாற்று உடைகளை வாங்கிக் கொடுக்கிறான். கடன்பட்டவன் என்னும் உணர்வு தன் சகோதரனுக்குள் எழவேண்டும் என்ற எண்ணத்தோடு செயல்படுகிறான். சாப்பிட்டு முடித்த பிறகு ஒரு சிறு தொகையையும் கொடுத்து நல்லதொரு விடுதியில் தங்கி இரவைக் கழிக்கும்படி சொல்கிறான்.

அடுத்தநாள் மகிமைநாதன் மீண்டும் செல்வநாதனின் அலுவலகத்துக்கு வருகிறான். தன் தரப்பிலிருந்து அவனுக்குச் சாப்பாடு வாங்கிக் கொடுக்க அழைக்கிறான். முந்தையநாள் இரவு செல்வநாதன் கொடுத்த பணத்தை வைத்து மங்காத்தா விளையாடியதாகவும் அதில் வெற்றி பெற்று ஏராளமாக சம்பாதித்ததாகவும் சொல்கிறான். முதல்நாள் தனக்காக செல்வநாதன் செலவழித்த தொகையைத் திருப்பித் தருகிறான். அப்படியே உரையாடல் நீண்டுகொண்டே போகிறது. ஒரு கட்டத்தில் இருவரும் தம் ஆழ்மனத்தில் தேக்கி வைத்திருக்கும் பாசத்தைப் புரிந்துகொள்கிறார்கள். அவர்கள் பயணம் செய்ய நேர்ந்த பாதைகள் வேறுவேறாயினும் அவரவர்கள் குறைநிறைகளோடு ஒருவரையொருவர் ஏற்றுக்கொள்ளும் மனநிலையை இருவருமே அடைகிறார்கள்.

சிறுகதையை முழுமையாகப் படித்த பிறகு, மனத்துக்குள் அசைபோட்டபடியே அந்தக் கதைக்காக வரையப்பட்டிருந்த ஓவியர் ஜெயராஜ் வரைந்திருந்த ஓவியத்தை சில கணங்கள் பார்த்தேன். அப்போதுதான் அந்தக் கதையை எழுதியவரின் பெயர் வி.கமலாராவ் என்று இருப்பதைப் பார்த்தேன். அவ்வளவு நேரமும் நான் அந்தக் கதையை எழுதியவர் விட்டல்ராவ் என்றே நினைத்திருந்தேன். வேறொரு பெயரைப் பார்த்ததும் யாராக இருக்கக்கூடும் என்றொரு கேள்வி எழுந்தது. ஒருவேளை அவரே பெயர் மாற்றி எழுதியிருக்கக்கூடுமோ என்றும் ஒருகணம் நினைத்துக்கொண்டேன். அவர் எழுதிய கதையாக இல்லாவிட்டால் அக்கதையை பைண்டிங் செய்யப்பட்ட அத்தொகுப்பில் ஏன் சேர்க்கவேண்டும் என்றொரு கேள்வியும் எழுந்தது.

தொகுப்பில் இருக்கும் மற்ற சிறுகதைகள் எப்படி பிரசுரமாகியிருக்கின்றன என்று தெரிந்துகொள்ளும் ஆவலில் பக்கங்களை வேகவேகமாகப் புரட்டினேன். துளசி ஒரு கண்காட்சி, அம்பூ, ரஞ்சிதம், பணிஞார் வீடு, திகைப்பு + திரிபுரசுந்தரி என கதைகளின் வரிசை நீண்டுகொண்டே சென்றது. எல்லாமே விட்டல்ராவ் என்னும் பெயரிலேயே வெளிவந்த கதைகள். பெரும்பாலான கதைகளுக்கு ஜெயராஜே ஓவியம் வரைந்திருந்தார்.

அந்த வரிசையில் வி.கமலாராவ் என்னும் பெயரில் வெளியான 'எஞ்சின் தண்ணீர்' என்னும் சிறுகதையும் இணைந்திருப்பதைப் பார்த்தேன். உடனே அந்தக் கதையையும் ஆர்வத்தோடு ஒரே மூச்சில் படித்துமுடித்தேன்.

கர்நாடகப் பின்னணியில் அக்கதை எழுதப் பட்டிருந்தது. தும்கூர் என்னும் நகரத்துக்கு அருகில் உள்ள குப்பி என்னும் சிறிய ரயில்வே ஸ்டேஷன்தான் அச்சிறுகதை நிகழும் களம். ஸ்டேஷனை ஒட்டி அகன்றதொரு புல்வெளி இருக்கிறது. லம்பாடிகள் எனப்படும் நாடோடியினத்தைச் சேர்ந்த சில குடும்பங்கள் அங்கே கூடாரங்கள் போட்டு தங்கியிருக்கின்றனர். ஸ்டேஷனை ஒட்டி ஒரு கிணறு இருக்கிறது. அதில் ஊற்று குறைவு என்பதால் அவர்களுக்குப் போதுமான தண்ணீர் கிடைப்பதில்லை. பகல் நேரத்தில் அந்த ஸ்டேஷனுக்கு ஒரு பாசஞ்சர் ரயில் வரும். குடங்களுடன் காத்திருந்து அந்த ரயில் எஞ்சின் தண்ணீரைப் பிடித்துக்கொண்டு சென்று தன் தேவையை நிறைவேற்றிக்கொள்கிறார்கள் நாடோடிகள். பார்ப்பதற்கு அழகாக இருக்கும் நாடோடிப் பெண்ணொருத்தியின் நடவடிக்கையை சிக்னல் கேபினில் நின்று வேலை செய்யும் ஊழியன் ஒருவன் தொடர்ந்து கவனித்து வருகிறான்.

அந்தப் பெண்ணுக்கும் அவன் மீது நாட்டம் இருக்கிறது. ஒருநாள் பகலில் அவனிடம் தன்னை இழக்கிறாள் அவள். அவளுக்கு அவன்மீது உண்மையான ஈடுபாடு இருக்கிறது. ஆனால், அவளுடைய உடல்மீதுமட்டும்நாட்டம்கொண்டிருந்த அவனுக்கு அவளுடைய காதல் மீது நாட்டமில்லை. அடிக்கடி வரவேண்டாம் என்று சொல்கிறான். அவள் அளித்த இன்பத்துக்கு ஈடாக பணம் கொடுக்கிறான். அதைப் பிடுங்கி அவன் முகத்திலேயே வீசிவிட்டு வெளியேறிவிடுகிறாள் அவள்.

அன்றுஇரவு அந்தச்செய்திஎப்படியோநாடோடிக் கூட்டத்தினரிடம் பரவி விடுகிறது. அடுத்தநாள் அவன் வேலைக்கு வந்ததும் பார்த்துக்கொள்ளலாம் என்று அவர்கள் நினைக்கிறார்கள். மறுநாள் விடிகிறது. அவன் வேலைக்கு வரவில்லை. வழக்கமாக வரும் பாசஞ்சர் ரயிலும் வரவில்லை. எஞ்சின் தண்ணீருக்கும் வழியில்லாமல் போகிறது. அடுத்த நாளும் அவன் வரவில்லை. ரயிலும் வரவில்லை. அந்த ஸ்டேஷனில் நிற்காமல் போகிற மெயில் வண்டி மட்டும் போவதும் வருவதுமாக இருக்கிறது.

பாசஞ்சர் ரயில் வராமல் போனதால் அவர்களுக்கு தண்ணீர் கிடைக்கவில்லை. தண்ணீர் இல்லாமல் நாடோடிக் குடும்பங்கள் தவியாய்த் தவிக்கின்றன. நகரத்தில் ரயில்வே ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்வதாகவும் அதனால் பயணிகள் ரயில் இயக்கப்படவில்லை என்றும் பேசிக்கொள்கிறார்கள். வேலை நிறுத்தத்தில் கலந்துகொள்ளச் சென்று விட்டதால்தான் கேபின்காரன் ஸ்டேஷனுக்கு வரவில்லை.

நிற்காமல் ஓடுகிற மெயில் ரயிலை நிறுத்துவதற்கு வழி என்ன என்று நாடோடிகள் யோசிக்கிறார்கள். ரயில் பாதையில் பொருத்தப்பட்டுள்ள பிளேட்டு களை நீக்கி தடையை ஏற்படுத்தினால் எந்த ரயிலானாலும் நின்றுதான் போகவேண்டும் என்று அவர்களுடைய மனம் சிந்திக்கிறது. அதனால் இரவில் யாருக்கும் தெரியாமல் பிளேட்டுகளை நீக்கும் முயற்சியில் இறங்குகிறார்கள் இரு இளைஞர்கள். ஆயினும் கண்காணிப்புக் காவலர்களிடம் சிக்கி சிறைப்படுகிறார்கள். அவர்கள் பெட்டியில் அடைக்கப்படுவதைப் பார்த்து செய்வதறியமால் தவிக்கிறது நாடோடிக் கூட்டம்.

இரு கதைகளுமே சிறப்பாக இருந்தன. ஆனால், கமலாராவும் விட்டடல்ராவும் ஒருவரா அல்லது வேறுவேறானவரா என்பதுதான் குழப்பமாகஇருந்தது. ஒருகணம் அவரையே தொலைபேசியில் அழைத்து தெளிவு பெற்றுவிடலாமென்று நினைத்தேன். தொகுப்பில் உள்ள எல்லாக் கதைகளையும் படித்த பிறகு கேட்டுக்கொள்ளலாமே, என்ன அவசரம் என்று ஒருகணம் தோன்றியதால் அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டேன்.

மேலும் இரு நாட்கள் நேரமெடுத்துக்கொண்டு ஒவ்வொரு கதையாகப் படித்து முடித்தேன். ஒவ்வொரு கதையும் புதுப்புது களம் சார்ந்து அழகாக எழுதப்பட்டிருந்தது. எல்லாவற்றையும் படித்து முடித்ததும் ஒருவித நிறைவில் மனம் தளும்பியது.

அடுத்த வாரம் அவரைச் சந்திக்கச் செல்லலாம் என்று திட்டமிட்டிருந்தேன். தொலைபேசியில் அழைத்துச் சொன்னபோது, அவர் தன் மகள் வீட்டில் இருப்பதாகச் சொன்னார். வீட்டுக்குத் திரும்பிவந்து அவர் என்னை அழைத்தபோது, நான் ஏதோ வேலையாக ஜெயநகர் பக்கம் தொடர்ந்து இருநாட்கள் செல்லும்படி நேர்ந்தது.

இதற்கிடையில் எனக்கும் விட்டடல்ராவுக்கும் பொதுவான நண்பரொருவர் ஒரு சின்ன அறுவை சிகிச்சைக்குப் பிறகு தன் வீட்டுக்குத் திரும்பியிருப்பதாக தகவல் கிடைத்தது. இருவரும் சேர்ந்து சென்று அவரைப் பார்த்துவிட்டு வரலாம் என்று சொன்னார் விட்டடல்ராவ். உடனடியாக "அப்படியே செய்யலாம்" என்று நானும் சொல்லிவிட்டேன்.

மறுநாள் காலையிலேயே விட்டடல்ராவ் எங்கள் வீட்டுக்கு வந்துவிட்டார். தேநீர் அருந்திவிட்டு நாங்கள் இருவரும் வீட்டிலிருந்து ஆட்டோவில் புறப்பட்டோம். அந்த நண்பரின் வீடு ஆடுகோடி பகுதிக்கு அருகில் இருந்தது. நீண்ட நேரப் பயணம். வண்டியில் அமர்ந்தபடி எதைஎதையோ பேசிக்கொண்டே சென்றோம்.

பேச்சுக்கு நடுவே தினமணி கதிர் தொகுப்பில் படித்த கதைகள் சட்டென நினைவுக்கு வந்தன. நான் உடனே விட்டடல்ராவிடம் அக்கதைகளைக் குறிப்பிட்டு "கதையை எழுதினவங்க பேரு கலாராவ்னு இருக்குது. அது உங்க மனைவி பேருதான? அந்த பேருலயும் நீங்க கதை எழுதியிருக்கீங்களா?" என்று கேட்டேன்.

"அது நான் எழுதிய கதை இல்லை பாவண்ணன். என் மனைவியே எழுதிய கதை" என்று புன்னகைத்தபடி சொன்னார் விட்டடல்ராவ்.

அந்தக் கோணத்தில் நான் யோசித்தே இராததால், ஒருகணம் நான் அவரையே அமைதியாகப் பார்த்தேன்.

"அவளுக்கு கதை எழுதுறதுல ரொம்ப ஆர்வம் உண்டு பாவண்ணன். நல்லாவே எழுதுவா. சின்ன வயசுலேர்ந்தே அவள் நல்ல படிப்பாளி. ஜெயகாந்தன், புதுமைப்பித்தன், க.நா.சு., அசோகமித்திரன், தி.ஜானகிராமன், சிங்காரம், சா.கந்தசாமி எல்லாருடைய கதைகளையும் படிச்சிருக்கா. ஓய்வு நேரத்துல சின்ன சின்ன ஆர்ட் ஒர்க் செய்வா. பனங்கொட்டையை நல்லா தேச்சி மழமழன்னு ஆக்கி, அதும் மேல ஓவியங்கள் வரைவா. அவளுக்கு நல்ல கலையுணர்ச்சி இருந்தது. அதனால இயல்பாவே படிக்கறதுலயும் எழுதறதுலயும் அவளுக்கு நாட்டம் இருந்தது..."

"உங்க கதைகளைப் படிச்சிப் படிச்சி அவுங்களுக்கும் கதை எழுதிப் பார்க்கிற ஆசை வந்ததா?"

"என்னுடைய செல்வாக்குன்னு சொல்றமாதிரி ஒரு விழுக்காடு கூட எதுவுமே அவகிட்ட கிடையாது. சுயமா தானாவே எழுதக் கத்துகிட்டா அவள். நல்ல திறமைசாலி. வீட்டுக்கு வரக்கூடிய உள்நாட்டு, வெளிநாட்டு பத்திரிகைகள் எல்லாத்தயும் அவளும் படிப்பா. சுவாரசியமான குறிப்புகள் ஏதாவது கண்ணுல பட்டா, அதை அழகா தனியா ஒரு துண்டு செய்தியா எழுதி எல்லாப் பத்திரிகைக்கும் அனுப்புவா. அஞ்சி ரூபா, பத்து ரூபான்னு அதுக்கு சன்மானம்லாம் மணியார்டர்ல வந்துட்டே இருக்கும். அந்த எழுத்துப் பழக்கம் கொஞ்சம் கொஞ்சமா வளர்ந்து வளர்ந்து தானாவே அவளுக்கு கதை எழுதற ஆர்வமா மாறிட்டுது."

"தினமணி கதிர் தொகுப்புல இருக்குதே, இதுதான் அவுங்க முதல் கதையா? அல்லது இதுக்கும் முன்னாலயே எழுதினாங்களா?"

"தினமணி கதிர்ல கதை வர்ரதுக்கு முன்னாலயே அவ கதை எழுத ஆரம்பிச்சிட்டா. அவளுடைய முதல் கதை கல்கி இதழ்ல வந்தது. அப்ப கல்கி இதழ் ஒரு சிறுகதைப்போட்டிய அறிவிச்சிருந்தாங்க. எனக்கு சர்ப்ரைஸா இருக்கணும்னு எனக்குத் தெரியாமலேயே ஒரு கதையை எழுதி அனுப்பி வச்சிட்டா. அந்தப் போட்டியில்ல அவளுக்கு ரெண்டாவது பரிசு கிடைச்சிது. அவளுக்கு அதுல ரொம்ப சந்தோஷம். அவளக்கு தன்னாலயும் முடியும்னு ஒரு தன்னம்பிக்கை வந்துட்டுது. தினமணி கதிர்ல வந்த கதை அவள்

எழுதிய மூனாவது கதைன்னு நினைக்கிறேன்”

அவர் தன் மனைவியைப் பற்றிப் பேசத் தொடங்கியதும் அவருடைய முகத்தில் ஒரு வெளிச்சம் படிந்ததைப் பார்த்தேன். ஆட்டோவுக்குள் அவர் அருகில் நெருக்கமாக அமர்ந்தபடி அவர் சொல்வதைக் கேட்டபடி இருந்தேன்.

“கல்கியில வந்த கதையுடைய தலைப்பு ஓய்வு. ஒருநாள் வேலையிலிருந்து திரும்பி வரும்போது வழக்கமா வீட்டுக்கு வாங்கி வரக்கூடிய வாராந்திரப் பத்திரிகைகள வாங்கிவந்தேன். அதுல கல்கியும் இருந்தது. அந்தக் கல்கியிலதான் சிறுகதைப் போட்டி முடிவுகள் வந்திருந்தது. ஒரு ஆர்வத்துல அந்தப் பட்டியலைப் படிச்சிப் பார்த்தேன். ஓய்வுங்கற பேருல அவ எழுதுன கதையுடைய தலைப்பு அந்தப் பட்டியல்ல இருந்தது. இரண்டாவது பரிசு. என்னம்மா, உன் பேரெல்லாம் கல்கியில வந்திருக்குதேன்னு அவகிட்ட காட்டினேன். அவ உடனே அந்தப் பத்திரிகைய வாங்கிப் பார்த்துட்டு ஆமாம், நான்தான் அனுப்பினேன்னு சொன்னா. ஐநூறு ரூபாயோ என்னமோ அந்தக் காலத்துல அதுக்கு பரிசா கிடைச்சிது. அவளுக்கு ரொம்ப சந்தோஷம்.”

“நீங்க அந்தக் கதையை படிச்சீங்களா?”

“ஆமாம். உடனே வாங்கிப் படிச்சேன். நல்லாவே எழுதியிருந்தா. ஒரு உண்மைச் சம்பவத்தை அழகா ஒரு கதையா மாத்தியிருந்தா. ஆனால், அந்தக் கதையைப் படிச்சதுமே எனக்குத்தான் ஒருவிதமான அச்சம் உருவாச்சி.”

“என்ன அச்சம்?”

“எங்க வீட்டுக்கு பக்கத்துலயே ஒரு ஆள் இருந்தார். ரயில்வேயில வேலை செஞ்சிட்டு ஓய்வு பெற்றவர். அவருடைய வாழ்க்கையில உண்மையிலயே நடந்த சம்பவம் அது. அதைத்தான் அவ கதையா எழுதியிருந்தா.”

“அப்புறம்?”

“என்னம்மா, அந்த ஆள் கதைய எழுதிட்டயே? அவங்க வீட்டுலயும். ரெகுலரா கல்கி வாங்கறாங்க, தெரியும் இல்லையா? நிச்சயமா இந்தக் கதையை அவுங்களும் படிப்பாங்க. படிச்சிட்டு நம்மகிட்ட சண்டைக்கு வந்தா என்னம்மா செய்யறதுன்னு கேட்டேன். அதெல்லாம் வரமாட்டாங்க விடுங்கன்னு ரொம்ப தைரியமா சொல்லிட்டு சிரிச்சிட்டே போயிட்டா?”

“அதுக்கப்புறம் என்னதான் ஆச்சு?”

“கடைசியில அவ சொன்னமாதிரிதான் ஆச்சி. அந்த ரயில்வேக்காரர் அந்தக் கதையைப் படிச்சாரோ இல்லையோ, நான் நெனச்சமாதிரி எதுவும் நடக்கவே இல்லை. அந்த வகையில ஒரு திருப்தி.”

“போட்டிக் கதையைத் தவிர கல்கியில வேற ஏதாவது கதை வந்ததா?”

“ஆமாம். பரிசு வாங்கி சில மாதங்களுக்குப் பிறகு இன்னொரு கதையும் வந்திச்சி.”

“அதுக்கப்புறம்தான் தினமணி கதிர்ல எழுத ஆரம்பிச்சாங்களா?”

“ஆமாம். எனக்குத் தெரியாமதான் அனுப்பி வைப்பா. கதை வந்ததுக்கு பிறகுதான் எனக்கே தெரியும். இந்த மாதிரி கதை வந்துருக்குது பாருங்கன்னு சொல்லி என்கிட்ட காட்டுவா. என்னுடைய பரிந்துரையில வந்ததுங்கற பேரு வந்துடக் கூடாதுங்கறதுல ரொம்ப எச்சரிக்கையாவே இருந்தா. அவளா எழுதுவா அவளே அனுப்பி வைப்பா. அந்த சுதந்திரத்துல நான் தலையிட்டதே இல்லை.”

“அது நிச்சயம் பெருமைக்குரிய ஒரு விஷயம்தான் சார்.”

“தினமணி கதிர்ல அவ நாலு கதைகள் எழுதினாள். ஒருமுறை ஏதோ ஒரு கூட்டத்துல சாவியை அவளுக்கு அறிமுகப்படுத்தனேன். அவளுடைய ஆர்வத்தை தெரிஞ்சிகிட்டு அவளை ரொம்பவே ஊக்கப்படுத்தினார் அவரு. பார்க்கும் போதெல்லாம் எழுதும்மா எழுதும்மான்னு சொல்லிட்டே இருந்தாரு. ஆனா அவளாலதான் தொடர்ந்து எழுதமுடியாம போயிட்டுது பாவண்ணன்.”

நாக்கு சப்புக்கொட்டியபடி சொல்லிவிட்டு ஒருகணம் வாகனங்கள் விரைந்தோடும் சாலையின் பக்கம் பார்த்தார்.

“ஏன், என்ன பிரச்சினை?”

“உடம்பு சிக்கல். டாக்டருங்க சரியா டயக்னஸ் செய்யாம குடுத்த ட்ரீட்மென்ட்டால புதுசா வந்த சிக்கல். எல்லாம் சேர்ந்து அவளை ரொம்ப கஷ்டப்படுத்திட்டுது. படிக்கறதுல அவளுக்கு எந்தக் கஷ்டமும் இல்லை. எப்படியோ சமாளிச்சி படிச்சிடுவா. ஆனா உட்கார்ந்து எழுதற வேலையை அவளால செய்யமுடியலை...”

“அப்படின்னா, அவுங்க எழுதியதே அந்த ஆறு கதைகள் மட்டும்தானா? வேற எந்தக் கதையும் இல்லையா?”

விட்டல்ராவ் ஒருகணம் யோசனையில் மூழ்கிவிட்டு பிறகு முகவாயை வருடியபடி, “முகங்கள்ங்கற பேருல அந்தக் காலத்துல ஒரு பத்திரிகை வந்திட்டிருந்தது. அதுல அந்தப் பத்திரிகைக்காரங்க ஒரு கதை கேட்டாங்கன்னு நான் ஒரு கதை அனுப்பி வச்சேன். அந்தக் கதை வெளியாச்சி. அது வந்த பிறகு ஏதோ ஒரு வேகத்துல அவளும் ஒரு கதை எழுதி அனுப்பி வச்சா. ஒரு மாசம் கழிச்சி அந்தக் கதையும் வெளியாச்சி. என்

கதையும் வந்திருக்குது பார்த்தீங்களான்னு என்கிட்ட சந்தோஷமா காட்டினா" என்றார்.

இன்னும் சில விவரங்கள் கிடைக்கக்கூடுமோ என எனக்குள் ஓர் எண்ணம் எழுந்தது. "இதைத்தவிர வேற பத்திரிகைகள்ல ஏதாவது முயற்சி செஞ்சாங்களா? குமுதம், குங்குமம், ஆனந்தவிகடன் மாதிரியான பத்திரிகைகள்ல எதுவும் வரலையா?" என்று கேட்டேன்.

"அதுலல்லாம் எழுதணும்னு அவளுக்கு ஆசை இருந்தது. சொல்லிட்டே இருப்பா. ஆனா எழுதலை" என்றபடி மெல்ல தலையை அசைத்து உதட்டைப் பிதுக்கியபடி நாக்கு சப்புக்கொட்டினார். "இல்லை பாவண்ணன். வேற எதுவும் இல்லை. அந்த ஏழு கதைகள்தான் அவளுடைய படைப்புலகம்" என்றார்.

அந்தப் பதில் என்னையும் ஒருகணம் உறைய வைத்துவிட்டது. அவர் மனைவியை நான் அறிவேன். இறுதிக்காலத்தில் அவர் அனுபவித்த உடல் தொந்தரவுகளையும் அறிவேன். அதனாலேயே உரையாடலை எப்படித் தொடர்வது என்று புரியாமல் அமைதியாக சாலையின் பக்கம் பார்வையைத் திருப்பினேன். அல்சூர் சுப்பிரமணியர் ஆலயத்தைக் கடந்து ஆட்டோ போய்க்கொண்டிருந்தது.

"நான் எடுத்துவந்த தினமணி கதிர் தொகுதியில ரெண்டு கதைகள்தான இருக்குது? அப்படின்னா மிச்ச ரெண்டு கதைகள் வேற தொகுதியில இருக்குதா?" என்றொரு கேள்வியோடு அவரை மீண்டும் உரையாடலுக்குள் இழுத்தேன்.

பெருமூச்சுடன் என் பக்கமாகப் பார்த்த விட்டல்ராவ், "எனக்கு சரியா சொல்லத் தெரியலை. ஒரு முறை பார்த்துட்டுதான் சொல்லணும் பாவண்ணன்" என்றார்.

"இதைத்தவிர இன்னும் தொகுதிகள் இருக்குது, இல்லையா?"

"ஆமாம். இன்னும் ரெண்டு இருக்குது."

"ஒருவேளை அதுல இருக்கலாம் சார். அடுத்த முறை வரும்போது நான் எடுத்துவந்து தேடிப் பார்க்கறேன்."

"சரி பாவண்ணன், எடுத்து வைக்கறேன்."

"இப்ப தினமணி கதிர்ல வந்த நாலு கதைகளையும் எடுத்துடறோம்னு வைங்க. கல்கி இதழ் கதைகளையும் முகங்கள் பத்திரிகையில வந்த கதையையும் இப்படி தொகுப்பா பைண்டிங் செஞ்சி வச்சிருந்தா கொடுங்க. அந்த மூனு கதைகளையும் எடுத்துடலாம்?"

"த்ச். அந்த மாதிரி எதையும் பைண்டிங் பண்ணி வைக்கலையே பாவண்ணன்."

அந்தப் பதில் எனக்குத் திகைப்பை அளித்தது.

"தொகுப்பா இல்லைன்னு சொன்னா, அந்தக் கதை வந்த பத்திரிகைகள தனியா வச்சிருக்கீங்களா?"

"அப்படியெல்லாம் தனியாவும் எடுத்து வைக்கலை பாவண்ணன். தேடினா கிடைக்குமா கிடைக்காதான்னு கூட என்னால சரியா சொல்லமுடியலை. எத்தனையோ பழைய பத்திரிகைகள், பேப்பர் கட்டிங்ஸ், படங்கள்னு கணக்கில்லாம பைண்டிங் செஞ்சி பாதுகாப்பா வச்சிருக்கிற ஆளுதான் நான். ஆனா இந்த விஷயத்துல எப்படியோ நான் கோட்டை விட்டுட்டேன். என்ன சொல்றதுன்னே எனக்குத் தெரியலை. ஏதோ அஜாக்கிரதையால எல்லாமே போயிடுச்சி."

ரொம்ப சங்கடமான குரலில் விட்டல்ராவ் சொன்ன பதில் எனக்கும் வருத்தமாகவே இருந்தது. அவருடைய நினைவாற்றல் மீது எனக்கு அபாரமான நம்பிக்கை உண்டு. அவருடைய தயக்கமான பதில் அவை அவரிடம் இல்லாமல் இருக்கக்கூடும் என்ற எண்ணத்தையே கொடுத்தது.

"சரி சார். அவசரமே இல்லை. ஒரு நம்பிக்கை வச்சி தேடுவோம் சார். மூனு கதைதான. கண்டுபிடிச்சிடலாம். எல்லாப் பத்திரிகைகளும் இப்ப ஆர்க்கீவ்ஸ்ங்கற பேருல ஒரு இணையக்காப்பகம் உருவாக்கறாங்க. எதிர்காலத்துல தமிழ்ப் பத்திரிகைகளுக்காக அப்படி ஒரு காப்பகம் உருவாகி வரலாம். அந்த நேரத்துல அம்மாவுடைய மிச்ச கதைகளையும் கண்டுபிடிச்சி எடுத்துடலாம்."

"அப்படியா, அதெல்லாம் சாத்தியமா?" என்று ஆச்சரியத்தோடு விட்டல்ராவ் கேட்டபோது மீண்டும் அவரிடம் பழைய உற்சாகம் திரும்பியிருப்பதைப் பார்த்தேன்.

"நூத்துக்கு நூறு விழுக்காடு சாத்தியம்தான் சார். கவலையே வேணாம் சார். எடுத்துரலாம். கதிர்ல வந்த நாலு கதைகள், கல்கியில வந்த நாலு கதைகள், முகங்கள்ல வந்த ஒரு கதை எல்லாத்தையும் சேர்த்து ஒரு தொகுப்பா கொண்டு வந்துடலாம். அம்மாவுடைய பிறந்த நாள் அல்லது நினைவு நாள் ஏதோ ஒரு நாள்ல அத வெளியிட்டுடலாம். அவுங்களுக்கு நாம செலுத்தற அஞ்சலியா அந்தத் தொகுப்பு இருக்கும்."

என்னை மீறி தன்னிச்சையாக வெளிப்பட்ட என் சொற்கள் எனக்கே ஒருவித நிறைவை அளித்தன. வி. கமலாராவ் என்று பெயரிடப்பட்ட புதியதொரு சிறுகதைத் தொகுப்பின் முகப்புப்பக்கம் என் கண்முன் நிழலாடுவதுபோல இருந்தது. "செய்யலாம் பாவண்ணன், செய்யலாம்" என்று விட்டல்ராவும் உற்சாகத்தோடு சொன்னார்.

பாவண்ணன் <writerpaavannan2015@gmail.com>

# மகவுடை மந்தி

ஹரணி
ஓவியம்: அதுல் தோடியா

அதுக்கும் நான் உட்கார்ந்து எழுதும் இடத்திற்கும் இடையில் வெல்டுமெஸ் பொடிக் கட்டங்கள் போட்ட கம்பி சுவர் மட்டுமே இருக்கிறது. அது ஒவ்வொரு கையிலும் நான்கு விரல்களால் பற்றிக்கொள்ளும் அளவுக்கு வெல்டுமெஸ் கட்டங்கள் கொஞ்சம் அகன்றே இருந்தன. ஆகவே அது வெகு பிடிமானமாகப் பிடித்துக்கொள்ள வசதியாக இருந்தது. வெளிப்புறமிருந்து அப்படியே சுவற்றில் வராட்டி தட்டினால் எப்படி ஒட்டிக்கொள்ளுமே அப்படி அது கம்பி சுவற்றில் ஒட்டிக்கொண்டிருந்தது. தலையை மட்டும் இடவலமாகவும் மேல்கீழுமாக ஆட்டிக்கொண்டது அடிக்கடி. கண்களை அகல விரித்து வாயை ஏதோ பேசுவதுபோல அசைத்தது. என்னிடம் ஏதோ சொல்வதுபோல இருந்தது அதன் செய்கை. முதலில் ஒன்றுதான் இப்படி. கொஞ்ச நேரத்தில் தடித்த உடலுடன், நடுத்தரமான வயதுடன், குட்டிகள் என நிறைய வந்து மேகம் மறைப்பதுபோல கம்பிச் சுவரை மறைத்து ஒட்டிக்கொண்டன.

ஒன்றிரண்டு என்னைப் பார்த்து உறுமிக் காட்டியது. நான் கையசைக்கப் பதிலுக்கு உறுமி எதிர்த்தது. நான் இடத்தைவிட்டு எழுந்து சுற்றுமுற்றும் தேடி ஒரு குச்சியை எடுத்துக்கொண்டு வர எல்லாம் கம்பிவிட்டு சட்டென்று தாவி எதிர்மாடி கைப்பிடிச் சுவரில் வரிசையாக உட்கார்ந்துகொண்டன. ஆனால், செய்கையில் மாற்றம் இல்லை. என்னைப் பார்த்து உறுமியவை உறுமியபடியே.

மௌனத்தில் உட்கார்ந்து எழுத முடியாது. முன்பு மொட்டைமாடியாக இருந்தபோது அவை உள்ளே வந்து படியிறங்கி வீட்டிற்குள் வந்து தேங்காய் மூடியோ பொட்டலமோ பிஸ்கட்டோ வாழைப் பழமோ, எதுவோ தூக்கும்வரை கவனிக்காமல் இருந்து, பின் பதறி அய்யய்யோ இது என்ன என்று உடனே விரட்ட முடியாதுபோகும். காரணம் குச்சி ஒன்றுதான் அதனை விரட்ட உதவும். நெருப்புக்குப் பயப்படும். மற்றவற்றிற்கு அவை பயங்காட்டாது எதிர்க்கும். "பேசாம இருங்க... சட்டுன்னு தாவி கடிச்சிடும்" என்பாள். அதற்கென்று ஒரு குச்சியைத் தயார் செய்து ஒரு இடத்தில் வைத்தால் எங்காவது எடுத்துப் போட்டுவிடுவாள். சரியாக அவை வரும்போது விரட்டுவதற்குக் கிடைக்காது. அதனால் வீட்டில் சிறு சண்டை எழும். "இங்க குச்சி வச்சா என்ன கொள்ளைபோவுது உனக்கு." "ஆமா.... வீடு கூட்டும்போது எதுக்கு இங்க வக்கறீங்க... அசிங்கமா இருக்கு. ஒரு பாம்போ பூச்சியோ வந்தா என்ன பண்ணுறது? அப்பப் பாத்துக்கலாம்."



குச்சி வந்தால் ஓடிவிடலாம் என்பதுபோல அப்படியே முன்வராண்டாவில் உட்கார்ந்து எடுத்தபொருளை நிதானமாகச் சாப்பிடும். அப்புறம் மாடியேறிப்போய் அடுத்தவீட்டு மாடிவரை விரட்டிவிட்டு கீழே வரவேண்டும்.

அதற்குப் பின்தான் மாடிக்கு ஷெட் போட்டாச்சு. ஷெட் போட்டதற்கு நிறைய காரணங்கள் உண்டு. அதில் ஒன்று இவற்றிடமிருந்து பொருட்களைக் காக்கவும்தான். வீட்டிற்குள் நாள் முழுக்க இருக்கும்போது ஒரு சிறைக்குள் இருப்பதுபோன்ற உணர்வு இருவருக்குள்ளும் இருந்து கொண்டேயிருக்கிறது... எதாவது பிரச்சினைகள் தோனியவண்ணமும் பேசியவண்ணமும் பொழுது கழிந்துவிடும்.

"ஒரு ஷெட் போட்டுக்கொடுத்துடுங்க... மாடிக்குப் போயிட்டா விடுதலையான மாதிரி இருக்கும்." உண்மைதான். இருவருமே இந்த விஷயத்தில் ஒற்றுமைதான். கீழ் வீட்டில் இருந்தால், "வரி கட்டவில்லை, டெலிபோன் பில் கட்டவில்லை, கட்டிக்கொடுத்த மகள் வீட்டுப் பிரச்சினை"..., "பையனுக்கு இன்னும் வரன் அமையவில்லை", "உங்கக்காவப் பாருங்க... பேசறாங்க... கேட்கவே மாட்டேங்குறீங்க...", "எங்கம்மாவால பிரச்சினைதான்...", "ஒரு செடி வக்க முடியலே... இந்த ஆடுங்க வந்து தின்னு தொலைச்சிடுது... கேட்ட சாத்தி வைக்கமாட்டேங்குறீங்க..." "நானா..." "நீங்கதான்..." "வெளியே போகும்போது சாத்திட்டுதானே போறேன்..." "ஆமா... தாழ்ப்பாள் போடாமப் போறீங்க... வீட்ட பார்க்க கண்றாவியா இருக்கு. எங்கப் பாரு புத்தகம், பேப்பரு... பேப்பர பார்த்தாலே



டென்ஷன் ஆவுது...”

இப்படிப் பல சண்டைகள் எழுவதற்கு வியுகம் வகுத்து நிற்கும். கோடைக்காலம் வந்துவிட்டால் அப்படியே மொட்டை மாடிக்குப்போய் வெறுந்தரையில் படுத்துக்கொண்டால்... அப்பாடா என்றொரு நிம்மதி இருக்கும். நல்ல காற்றடிக்கும். உறக்கம் வருவது தெரியாது. விடிந்ததும் தெரியாமல் உறக்கம் தொடர்ந்திருக்கும் சுகம் அலாதியானது.

எல்லாம் ஓரளவுக்கு ஒழுங்குபடுத்தி... பிளப் லோனில் ஷெட்போட்டு வந்து உட்கார்ந்தா கம்பி சுவருக்கு அப்புறம் இவைகள். டென்ஷன்தான்.

குச்சியோ அல்லது எதாவது எடுத்து அடிக்கப்போனால்... பக்கத்து வீட்டுக் கொல்லையிலிருந்து குரல் வரும்... “ஏண்ணே... அதுங்கள விரட்டி விடுங்க... அடிக்காதீங்கண்ணே... ஆஞ்சநேயரு...”

“ஏங்க படிச்சவருதானே நீங்க... அதுங்க அப்படித்தான் இருக்கும்... சும்மா விரட்டி விடுங்க...”

அவை எதிர்வீட்டுக் கைப்பிடிச்சுவர் விட்டு நீங்காது உட்கார்ந்திருந்தன. என்னைப் பார்த்தபடியும். அப்போதுதான் கவனித்தேன். அதில் ஒன்று, குட்டியொன்று வயிற்றைக் கவ்வியபடி இருக்க சுமந்து உட்கார்ந்திருந்தது. கொஞ்ச நேரத்தில் மெல்ல குட்டி விடுபட்டு கைப்பிடிச் சுவரினை விட்டு ஒரு தாவு தாவி என்னருகே வந்து, எதாச்சும் கொடேன் என்பதுபோல சின்ன வண்டு விழிகளை வைத்துக்கொண்டு பிஞ்சு விரல்களால் கம்பி கட்டங்களில் சுரண்டியது. அதன் முழுக்கையும் உள்ளே நுழையும் அளவுக்குத்தான் வெல்டுமெஸ் கட்டமும் இருந்தது.

மேசை டிராயரை இழுத்துப் பார்த்தேன். மேரி கோல்ட் பிஸ்கட் இருந்தது. இரண்டை எடுத்துப் பாகைமானிபோல உடைத்து நீட்ட சட்டென்று தாவி வாங்கியதுதான், உடனே மற்ற எல்லாமும் மறுபடியும் வெல்டுமெஸ் கட்டங்களைப் பற்றியபடி என்னருகே வந்து உறும ஆரம்பித்துவிட்டன. இது தேவையில்லாத வேலைதான். வெல்டுமெஸ் அடைப்பு இருப்பதால் உள்ளே வரமுடியாத நிலை அவற்றுக்கு.

கிட்டதட்ட மனித செய்கைகளை அவை முழுக்கக் காண்பித்தபடி இருந்தன.

அப்பா அடிக்கடி, “மூஞ்ச பாரு... குரங்காட்டம் வச்சிக்கிட்டு... வேலைக்குப்போற ஆம்பளக்கி விடிஞ்சிடும்... கருங்குரங்கு” என்று திட்டுவார், அம்மாவை.

“நான் குரங்குன்னா என்னக் கட்டுனது என்னவாம்? செங்குரங்கா?” (அப்பா நல்ல சிவப்பு நிறம்... அம்மா மாநிறம்)

அதற்குமேல் அப்பா பேசமாட்டார். அம்மாவிடம் பேசி ஜெயிக்க முடியாது. அம்மா கைநாட்டு. ஆனால், பேச்சில் பேச்சிலர் டிகிரி படித்தவள் போல. கில்லாடி. நிறைய பழமொழிகள், சொலவடைகளைப்

பயன்படுத்துவாள்.

அப்பா இறந்து பதினாறு வருடங்கள் கடந்துவிட்டன. நேற்று போலிருக்கிறது. பதினாறு வருடங்கள் கைசொடுக்கல் போலக் கரைந்துவிட்டன. அம்மா இப்பவும் சொலவடைகளைப் பயன்படுத்துகிறாள். ஆனால், அப்பாவும் அம்மாவும் நாங்களுமாக இருந்த வீட்டில் இப்போது அம்மாவுடன் அவளின் தனிமை மட்டுமே இருக்கிறது. கூடவே ஒத்தாசைக்கு அப்பாவின் பென்ஷன். எவ்வளவு என்று தெரியாது. கைநாட்டு வைப்பாள். கேட்கிற பொருள்களை வாங்கிக் கொடுப்பேன். இப்போது முற்றிலுமாகத் தட்டுக்கெட்டுப் போய்விட்டது. வயது எண்பத்தியாறைக் கடக்கிறது. எந்த நோயும் இல்லை. முதுமையின் தளர்ச்சி மட்டிலுமே.

அம்மாவுக்குள் ஒரு மெல்லிய சோகம் இருந்து கொண்டேயிருக்கிறது. அடிக்கடிச் சொல்லுவாள். "நா... பதிமூணு வயசுல கலியாணம் பண்ணிக்கிட்டு வந்தேன் உங்கப்பாவ. முப்பது வயசுக்குள்ள அஞ்சு புள்ளங்க... புள்ளங்கள வளக்க நான் பட்டபாடு கொஞ்ச நஞ்சமா... அந்த அம்பலூராவுக்குத்தான் (அன்பில் மாரியம்மன்) தெரியும். உங்க அப்பாயி அத்தன பாடுபடுத்தும்... புள்ளங்க வளந்துட்டா சரியாயிடும்னு நினைச்சு இருந்தேன். எல்லாம் வளந்து படிச்சி உங்க அக்காவ என் தம்பிக்குக் கல்யாணம் பண்ணேன். அது கொஞ்சம் சந்தோஷமா இருந்துச்சி. ஆனா அது நீடிக்கலே... நாலு புள்ளங்களப் பெத்துப் போட்டுட்டு எந்தம்பி போயிட்டான்... வூட்டுக்குத் தலைச்சப்புள்ள இப்படித் தாலியறுத்துப்புட்டு தவிச்சி நிக்குதேன்று நானும் உங்கப்பாவும் அதை கரைசேக்க படாதபாடுபட்டோம்... புருஷன இழந்த கொறத் தெரியாமப் பாத்துக்க அத்தனை பாடுபட்டோம்... எனக்கும் உங்கப்பாவுக்கும்னு தனியா எதுவும் கெடயாது. எல்லாமும் புள்ளங்கதான். கடைசி வரைக்கும் உங்கப்பாவுக்கு அப்படியே விதி போட்டுடுச்சி. ஆனா எதுவும் சொன்னதில்லே. எந்த கொறயும் வச்சதில்லே... மனசுல ஆயிரம் வச்சிருந்துச்சோ என்னமோ தெரியாது... ஆயிரம் யானய நிறுத்தலாம் அது நெஞ்சுல ஒண்ணு வெளியே வராது. கடைசியா ஆசுபத்திரில படுத்திருக்கும்போது என்னப் பார்த்துப் பார்த்துத் தண்ணிவரும் கண்ணுல... என்ன சொல்ல நினைச்சுதோ தெரியாது... அதான் பேசமுடியாம வாயயும் கையயும் இழுத்துப் புடிச்சே... அப்படியே இருந்து முடிஞ்சி போயிடிச்சு அதுவும். அதுக்கப்புறம் என்னோட வாழ்க்கை அடுப்படிக்கும் இந்த வூட்டுக்குள்ளயும்தான்..."

அப்பா இறந்தபின் கொஞ்சம் வருடங்கள் நல்ல நிதானத்தில் இருந்தாள், அப்போ பேசியதுதான் இவை எல்லாமும். அப்புறம் தட்டுகெட்டுப் போய்விட்டது. பேசியதையே பேசி... யாரோ தன்னைக் கொல்லவருவதாகக் கற்பனை செய்துகொண்டு... அப்படியே நாட்கள் கழிகின்றன.

"அடிக்கடி வா..வா... அவசரமான செய்தி இருக்கிறது" என்றழைப்பாள். ஓடுவேன். எதையாவது பேசுவாள். "யார் கிட்டேயும் சொல்லாதே... பக்கத்து சந்துல குடியிருக்கிற பெயிண்டடிக்கிற பையன் இருக்கால்லே... அவன் என்னை கொலை செய்யறதுக்காகப் பாத்துக்கிட்டிருக்கானாம்... நா பாட்டுக்குக் கொல்லையிலே குளிக்கிறே... அந்தப் பக்கமிருந்து பேசுறாங்க... எத்தனை நாளக்கி... சீக்கிரம் கொன்னுடறேங்கறாங்க... தண்ணி மொண்டு தலையில ஊத்துற சத்தம்கூட கேக்காமக் குளிச்சிட்டு வந்துடறேன் தெரியுமா..."

"சரி... நான் பாத்துக்கறேன்... விடுங்க..."

"நீ எதுக்கும் போலிசுல சொல்லி வச்சிடு..."

இப்படி ஏதேனும் ஒன்றைக் கற்பனை செய்து பேசப் பழகிவிட்டிருந்தாள்.

மருத்துவரிடம் முடியாமல் அழைத்துப்போய் காண்பித்தபோது... "அவ்வளவுதான்... வயது. இப்படித்தான் தட்டுக்கெட்டுப்போகும்... இதுதான் அவங்களுக்கு இறுதிக் கட்டம்... எது சொன்னாலும் ஏற்கமாட்டாங்க... கேட்கிற மனநிலை இல்லை... இருக்கறவரைக்கும் நல்லாப் பாத்துக்கங்க..." என்றார். இரவில் உறங்குவதற்கு தூக்க மாத்திரைகள் எழுதித் தந்தார். ஆனால், பலனில்லை. மாத்திரைப் போட்டு விடியவிடிய விழித்திருந்தாள்.

எல்லாமும் குறைந்துவிட்டன. தூக்கம், உணவு, பேச்சு, நடை, செயல்கள் எல்லாமும். காலையில் ஒரு டம்ளர் காபியோ டீயோ கொடுத்தால் அதில் மூன்று ரஸ்க் துண்டுகளை நனைத்துச் சாப்பிட்டுவிடுவாள். அப்புறம் ஒருமணிநேரம் கழித்து மூன்று இட்லிகள் அல்லது இரண்டு தோசைகள் இப்படி. இது சாப்பிடுவதற்குள் மணி பதினொன்று ஆகிவிடும். சில சமயம் மதியச் சாப்பாடு சாப்பிடமாட்டாள். சில சமயம் சாப்பிடுவாள். அவள் கைப்பிடி அளவுக்கு ஆறு பிடிகள்தான் மொத்த சாப்பாடும் தொட்டுக்காயும். இரவு காலையுணவு போலத்தான். ஆனால், அடிக்கடி குளிர்ச்சியாக எதையேனும் வாங்கிக்கொடுத்தால் குடிப்பாள். பெரும்பாலும் அவளுக்குப் பிடித்தது லெஸ்ஸிதான்.

திடீரென்று மாடிப்படியில் யாரோ ஏறிவரும் சப்தம் கேட்டது. எழுந்து பார்த்தேன். தேவகி பரபரவென்று ஏறினாள்.

"ஏங்க... வாங்க சீக்கிரம்..." என்றாள். நானும் பதறி எழுந்தேன்.

"சரவணன் இறந்துட்டாராம்..."

"என்ன சொல்றே?"

"ஆமாம் சரவணன் இறந்துட்டாராம்.



ஆம்புலன்சுல கொண்டு வரப் போறாங்களாம்… வீட்டை ஒதுங்க வைக்கச் சொன்னாங்க.”

இறங்கியோடினோம்.

சரவணன் மூத்த அக்காவின் மருமகன். நாற்பத்து ஐந்துவயதுதான். சாகிறவயதில்லை. ஆனாலும் தானே தேடிக்கொண்ட சாவுதான் என்று சொல்லவேண்டும். மிகவும் நல்லவன். தானுண்டு தன்குடும்பம் உண்டு என்றிருந்தவன். அவனுக்குத் தெரியாத வேலைகள் கிடையாது. எல்லா வேலைகளிலும் படு சமர்த்தன். மனைவியையும் மகளையும் அப்படி நேசித்தவன். அது ஆண்டவனுக்குப் பொறுக்கவில்லை போலும்.

பக்கத்தில்தான் வீடு. போனபோது அக்கா உட்கார்ந்து அழுது கொண்டிருந்தாள். என்னைப் பார்த்ததும், “பாத்தியா என்னோட கதியே. எம்மவளுக்கும் போட்டிடிச்சி” என்றாள். நான் உறைந்துபோய் நின்றேன். தேவகி அருகே உட்கார்ந்து ஆறுதல் பேச ஆரம்பித்தாள்.

அக்காவை அம்மாவின் தம்பிக்கே கொடுத்து நான்கு பிள்ளைகளோடு அக்கா விதவையானபோது அவளுக்கு வயது 35. பிள்ளைகள் அடுத்தடுத்த ஒருவருட வித்தியாசத்தில் சின்ன வயசுகள். தவித்து நின்றன. எப்படியோ சமாளித்து அப்பாவும் அம்மாவும் நாங்களுமாகப் போராடி ஒருநிலைக்குக் கொண்டுவந்து நிற்கிறபோது இடி வந்து இறங்கியிருக்கிறது.

இப்போது வானதிக்கு முப்பத்து ஐந்து வயது. அக்காவின் வயதில் வானதியும் விதவையானது சாபம் விதிக்கப்பட்ட வாழ்வுபோல ஆகிவிட்டது. வானதி அமைதியானவள். யாரையும் காயப்படுத்தாமல் பேசும் குணங்கொண்டவள். அவளுக்கு இது நேர்ந்திருக்கக்கூடாது.

எல்லாம் ஏற்பாடுகளையும் செய்தார்கள். சாமியானாப் பந்தல் போட்டார்கள். தட்டு வண்டியில் சேர்கள் வந்து இறங்கின. யாரோ, “கேன்ல போய் டீ வாங்கிட்டு வந்து வையுங்க” என்றார்கள். நான்கு பேர் தப்பு அடிக்கவந்து இறங்கி தப்பைப் பிரித்து அடிக்க ஆரம்பித்தார்கள். ஒரு துக்க வீட்டிற்கான அத்தனையும் வந்து ஒட்டிக்கொண்டன.

ஆம்புலன்ஸ் அப்போதுதான் தெருவிற்குள் நுழைந்தது. வீட்டு வாசலில் வந்து நின்றதும் அக்கா உட்பட அத்தனைப் பெண்களும் தெருவில் வந்து நின்று அடித்துக்கொண்டு அழ ஆரம்பித்தார்கள். ஸ்ட்ரெச்சரில் சரவணன் உடலோடு இறங்கினாள் வானதி. அழுதழுது கண்கள் சிவந்துலர்ந்து வெளிறி வீங்கியிறங்கினாள். இனி அழுவதற்கு என்ன இருக்கிறது என்பதுபோல.

வானதியும் சரவணனும் வாழ்ந்தது பதினாறு வருடங்கள். அதில் பத்து வருடங்கள் அயல்நாட்டில் இருந்தான். இருந்த ஆறு வருடங்களில் வானதியுடனும் தன்னுடைய ஒரே மகளுடனும் அவர்களுக்காகவே வாழ்ந்தான். இனி வாழமுடியாது என்று அவனுக்குத் தோனியதுபோல போய்விட்டான். இறப்பிற்கு ஆயிரம் காரணங்கள் இருக்கும். யார் எதை வேண்டுமானாலும் சொல்வார்கள். என்றாலும் இறப்பின் வலி இறந்தவரை இழந்த குடும்பத்திற்கே தெரியும்.

எல்லாம் முடிந்தன. சுத்தமாகத் துடைக்கப்பட்டுக் காய்ந்த தரையைப் போல சரவணன் வீடு

ஆகிவிட்டது. அங்கே வானதியும் அவள் மகளுமே தனித்து இருந்தார்கள்.

அம்மா வந்தாள். அவளுக்கு இந்த இறப்பின் வலி தெரியவில்லை. புரியவில்லை. யார் எடுத்துச் சொன்னாலும் அதனையுணர்ந்து உணர்வுகளை வெளிப்படுத்தும் மனநிலையை அம்மா இழந்திருந்தாள். "வானதி புருஷன் இறந்துபோயிட்டாரு உங்களுக்குத் தெரியுமா" என்று யாரோ அம்மாவிடம் கேட்டார்கள்.

"ம் தெரியுமே... போய் அழுதுட்டுதான் வந்தேன். தீட்டு வீட்டுலே ரொம்பநேரம் இருக்கக்கூடாதுன்னு இப்பத்தான் தலைமுழுகிட்டு சாமி விளக்கேத்துறேன்..."

இப்படியெல்லாம் அம்மாவால் பேச முடியாது. என்னவோ நிதானமிழந்து பேசுகிறாள்.

வானதியின் தம்பி ஒருத்தன்தான் அலைந்து திரிந்து எல்லாக் காரியங்களையும் பார்த்தான். மகன் படுகிற பாட்டைப் பார்த்து அக்கா என்னிடம் வாய்விட்டுக் கதறினாள்.

"அன்னிக்கு இதே வயசுலதான் உங்க மாமா என்னை விட்டுட்டுப் போனாரு... நாலு புள்ளங்கள வச்சிக்கிட்டு தவிச்சேன்... ஆனாலும் அந்தத் தவிப்புத் தெரியாம நீங்க எல்லாம் இருந்து என்னை ஆதரிச்சிங்க... இன்னிக்கு பாரு ஒத்த ஆளா எம்புள்ள கெடந்து தவிக்கிறான்... வானதி என்னப் பண்ணப்போறாளோன்னு தெரியலியே... எம்புள்ளயும் எத்தனைதான் சுமப்பான்... குருவி தலையில பனங்காய வச்சமாதிரி..."

மாமா இறந்துபோன பின்னால்... பிள்ளைகள் வளர்ந்தபின்னர் ஒரு அரசு வேலைக்கு முயற்சி செய்து, தன் அக்காக்களுக்கு எல்லாமும் செய்து வைத்து, தன்னுடைய கல்யாணத்தையும் செய்துகொண்டான். இப்போது அம்மாவைப் போலவே அக்காவின் நிலைமையும் ஆனதில் நிலைகுலைந்து போயிருக்கிறான். சரவணனை மருத்துவமனையில் சேர்த்தது முதல் திரும்ப கொண்டுவந்தவரை தூக்கமில்லாமல் தவித்தவன் அவன் ஒருவன்தான். அதான் பிள்ளையை நினைத்துக் கதறுகிறாள், அக்கா.

எனக்கும் நிரம்பக் கவலையாக இருந்தது அவனை நினைக்க.

சரவணன் இறந்து முப்பது முடிந்துவிட்டது. வானதி எல்லாவற்றுக்கும் அலைந்துகொண்டிருக்கிறாள். சரவணன் பெயரில் இருப்பதையெல்லாம் தன்னுடைய பெயருக்கு மாற்றவேண்டும். தனியொருத்தியாகவே அலைகிறாள்.

நாங்களும் மேலே மாடிக்கு வந்து முப்பது நாள்கள் ஆகிவிட்டன. நானும் தேவகியும் மாடிக்கு வந்தோம்.

கம்பி சன்னல்களின் வழியாகப் பார்த்தேன். குரங்குகளைக் காணவில்லை. என்னவாயிருக்கும்?

பக்கத்து வீட்டுக்காரரிடம் கேட்டேன். "இங்க என்ன சார் அதுங்களுக்கு சாப்பிடக் கிடைக்கும்? இப்படியே கொஞ்சநாள் ஒவ்வொரு இடத்துலேயும் போராடும்... அப்புறம் எங்கோ போயிடும்... மறுபடியும் ஒரு ரவுண்டு முடிச்சிட்டு இங்கயே வரும்சார்..." என்றார்.

குட்டியுடன் இருந்த அந்த தாய்க் குரங்கு நினைவில் வந்தது. இலக்கியங்களில் படித்திருக்கிறேன். மகவுடை மந்தி என்பார்கள். எப்போதும் குட்டியைச் சுமந்துகொண்டுதான் திரியுமாம். அப்படியே மரத்திற்கு மரம் தாவுமாம். எப்படித் தாய்க்குரங்கு தாவினாலும் குட்டி குட்டி பிடியை விடாதாம். அப்படி ஒருவேளை பிடிதவறி விழுந்துவிட்டால் அவ்வளவுதான்... அந்தக் குட்டிக்கு வாழும் தகுதியில்லை என்று அப்படியே விட்டுவிட்டுப் போய்விடுமாம் தாய்க் குரங்கு.

காதலியைப் பிரிந்து காதலன் வந்துவிடுவான். ஆனாலும் அவன் நெஞ்சு அவளிடமே இருக்கிறதாம். அது எப்படியென்றால் இந்த மகவுடைமந்தி போல என்பார்கள். எப்படி குட்டி இறுகத் தாய்க் குரங்கைத் தழுவிக் கொண்டிருக்கிறதோ அப்படி காதலன் நெஞ்சம் தலைவியின் நினைவை விடாது பற்றிக்கொண்டிருக்கிறது என்று.

ஏனோ வானதியின் நினைவு வந்தது. அவளுக்கும் ஒரு பெண் குழந்தை இருக்கிறாள். அவளுக்கு இவளும் இவளுக்கு அவளுந்தான்.

அம்மா வந்தாள். தேவகி பேசிக்கொண்டிருந்தாள். பேச்சு வானதியின் எதிர்காலம் குறித்துத் திரும்பியது. "பாவம் சின்ன வயசு... பொம்பளபுள்ள வேற இருக்கு. அதுக்கு ஒரு சடங்கு விழான்னு பாக்காமப் போயிட்டாரு" என்றாள் தேவகி.

"ஆமாம் தேவகி... பாவந்தான்" என்றாள் அம்மா.

"எப்படி இந்தப் பொம்பளப் புள்ளய வச்சிக்கிட்டு சமாளிக்கப் போறாங்கன்னு தெரியல" என்று சொல்லிவிட்டு வானதியின் தம்பியைச் சொல்லி... "பாவம்... அவன்தான் படாதபாடு படறான்" என்று முடித்தாள் தேவகி.

"ஆமாம் தேவகி... அவன் பாவந்தான்..." என்றாள் அம்மா.

சற்று நேரம் மௌனம் நிலவியது.

அம்மா சொன்னாள் பட்டென்று... "அவனுக்கும் அவனோட தாத்தாவோட விதி எழுதிடிச்சுப் போல..." என்றாள்.

தேவகிக்குப் புரியவில்லை.

ஹரணி <thanjavurharani@gmail.com>

(10ஆம் பக்கம் தொடர்ச்சி)



## 31. எழுதியும் தீராதது

நீ
தீராத பிரியத்தின்
வாசனை.

நினைவுகளின்
தாபத் திரி.
கொளுத்திய கணமே
உடலெங்கும் பரவுவாய்
எல்லைகளுடைத்து.

கிளையை அணைத்துக்கொள்கிற காற்றாக
இடைவெளியின்றி
உன்னுள் அடைக்கலமாகிறேன்.

ஒவ்வொருமுறை
நான்
நதியாகிறபோதும்
நீ
தொலைவிலிருக்கும்
கடலாகிறாய்.

உன்னைச் சேராது
எங்கெங்கோ பயணித்து
எதையெதையோ தேடியதை
வாழ்வு என்று
எப்படிச் சொல்வது?

கண்மணி!

உயிர்க் கூத்தாடும் அந்த
உன்னதத் தருணங்களைக்
கூடலென்றும் கலவியென்றும் மட்டும்
சுருக்கிச்
சொல்லிவிடமுடியுமா?

ஐம்புலன்களின் ஊற்றுகளில் பீரிடும்
உனக்கான பிரியத்தை
நானுனக்கு வேறு எப்படிச் சொல்வது?

சிறுகை அள்ளிய
மணலில்
துளி கடலை
வீட்டுக்கு எடுத்துவந்து
குடுவையில்
பத்திரப்படுத்தும் சிறுவனாகத்தான்
சகி
என்
உன்மத்தத்தை
உன்னுடல்மீது தினம்
நான் எழுதுகிறேன்.

இதை
உன்னுடலன்றி
இன்னோர் தேகத்தின்மீது
என்னால்
எழுதவேமுடியாதென்பதால்
இது காதல்

(தொடரும்)

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# சர்வாதிகாரத்தின் சமையலறை!

## வினோதினி பாலு சத்யா

கிராம்சி புரண்டு படுக்கிறார் (அரசியல் கவிதைகள்) - நா.வே. அருள்; விலை ரூ. 160; வெளியீடு: பாரதி புத்தகாலயம், 421 அண்ணாசாலை, தேனாம்பேட்டை, சென்னை 600018; தொலைபேசி: 044 24332424; மின்னஞ்சல்: thamizhbooks@gmail.com

`Something we were withholding made us weak Until we found out that it was ourselves' என்கிறார் கவிஞர் ராபர்ட் ஃப்ராஸ்ட். இந்த வரிகளை ஆராய்ந்தால் ஆண் - பெண் உறவு குறித்த ஓர் அழகான காதல் பொழிப்புரை வெளிப்படும். `நாங்கள் சொல்லாமல் வைத்திருந்த ஏதோ ஒன்று எங்களை பலவீனப்படுத்தியது. அது நாங்கள்தான் (இருவரும் ஒன்று சேருவது) என்பதைக் கண்டறியும் வரை' என்று அர்த்தம்கொள்ளலாம். ஆனால், உண்மையில் ராபர்ட் ஃப்ராஸ்ட் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை. அமெரிக்கா, பிரிட்டனிடமிருந்து சுதந்திரம் பெற்றது குறித்துப் பேசுகின்றன இந்த வரிகள். `நாங்கள் கொடுக்காமலேயே வைத்திருந்த ஏதோ ஒன்று எங்களை பலவீனப்படுத்தியது. அது நாங்கள்தான் (நாங்கள் - சுதந்திர மனிதர்கள்) என்பதைக் கண்டறியும் வரை' என்பது அவர் கூற வரும் கருத்து. `நான்கு முறை புலிட்சர் விருது பெற்ற ஒரே கவிஞர்' எவ்வளவு வெளிப்படையாக அரசியல் பேசுகிறார் என்பது ஆச்சர்யப்பட வைக்கிறது.

நா.வே. அருளின் `கிராம்சி புரண்டு படுக்கிறார்' கவிதை நூல், `அரசியல் கவிதைகள்' என்ற அடையாளத்துடன் வெளிவந்திருக்கிறது. அந்த நூலுக்குள் போவதற்கு முன்பாக, `அரசியல் கவிதைகள்' தொடர்பாக தமிழ் இலக்கிய வெளியில் நிலவும் பொதுப்பார்வையையும் கொஞ்சம் பார்க்க வேண்டியிருக்கிறது.

ராபர்ட் ஃப்ராஸ்ட் மட்டுமல்ல... மாயா ஏஞ்சலோ, மில்லர் வில்லியம்ஸ், எலிசபெத் அலெக்ஸாண்டர், வால்ட் விட்மேன், லாங்ஸ்டன் ஹ்யூக்ஸ் போன்ற அமெரிக்கக்கவிஞர்களும்எளியமொழியில், வலிமையான கருத்துகளை அரசியல் கவிதைகளாக எழுதியிருக்கிறார்கள். அமெரிக்கா சிறு உதாரணம்தான். அயர்லாந்தில் டபிள்யூ.பி.யீட்ஸ், ஜெர்மனியில் பெர்ட்டோல்ட் பிரெக்ட், சிலியில் பாப்லோ நெருடா, துருக்கி கவிஞர் நாஜிம் ஹிக்மெட்... என நீள்கிறது இந்த வகைக் கவிஞர்களின் பட்டியல். நாஜிம் ஹிக்மெட்டின் `சிறைக்குச் செல்லவிருப்பவர்களுக்குச் சில அறிவுரைகள்' (Some Advice to Those Who Will Serve Time in Prison) கவிதை பேசும் அரசியல் நம்மை அசரடிப்பது. `அரசியல் பேசுவதாலேயே, அதையும் உரக்கப் பேசுவதாலேயே ஒரு கவிதை அதன் கவிதைத் தன்மையை இழந்துவிடுகிறது' என்பதை உடைத்துப்போடுகின்றன நெருடா உட்பட பலரின் கவிதைகள். தமிழில் மட்டும்தான் கவிஞர் இன்குலாப் போன்றவர்களை இலக்கிய வகைமைக்குள் அடக்காமல், ஓரங்கட்டப் பார்க்கிறார்கள். அருள் இதை நன்கு அறிவார். `ஆமாங்கய்யா... இது அரசியல் கவிதைகள்தான். என்ன இப்போ?' என்கிற அழுத்தமான குரலோடு தன் கவிதைகளை அடுக்குகிறார்.

`கவிதை' என்கிறவார்த்தையை அழகியல்பூர்வமாக அணுகுகிற ஆரம்பகட்ட வாசகனுக்கு இந்தத் தொகுப்பு ஏமாற்றத்தைத் தரலாம். ஏனெனில், மடல் விரிக்கும் பூக்களின்நுட்பமோ, சிறு மழையில் நனைந்து கூடு சேர்கிற பறவை சிறகசைக்கும் விவரிப்போ, அந்தி வானத்தின் பொன் தீட்டலைக் காட்சிப்படுத்தும் வித்தையோ இதில் இருக்காது. மேலாக, துணுக்குற வைக்கும் கவிதைகள் இவை.



நவீன, பின்நவீனத்துவப் பின்னணிப் படைப்பாளர்களும் அந்தப் படைப்புகளை உச்சிமுகர்கிற வாசகர்களும் பகடி செய்வதற்கும்கூட இதில் தாராளமாக வாய்ப்புகளை அள்ளி வழங்குகிறார், அருள். ஒருவேளை அது அவருடைய பெருந்தன்மையாகக்கூட இருக்கலாம். படைப்புவெளியில், `நான் ஒரு முற்போக்காளன். த.மு.எ.க.ச என்கிற முற்போக்கு இலக்கிய முகாமில் தீவிரமாக






இயங்குகிறவன். சமூக நீதியையும் சமூக அநீதியையும் படைப்புகளில் பகிர்கிறவன். என் நண்பர்கள் இன்னார் இன்னார்...' என்கிற அடையாளத்தை பகிரங்கமாக வைத்துவிட்டே கவிதை புனைகிறார். திறந்த புத்தகமாக இருப்பது சரியா, தவறா என்ற கேள்விக்கு அப்பால், அதற்கும் ஒரு தைரியம் வேண்டும்; திராணி வேண்டும் என்பது மட்டும் தெளிவாகிறது.

கவிதைகளைப் புதிதாக வாசிக்க ஆரம்பிக்கும் வாசகன், `எப்படி எப்படியெல்லாம் பிணமாக முடியும்? - ஒரு வகுப்பெடுத்தல்' என்கிற கவிதையின் தலைப்பு விதிர்விதிர்க்கச் செய்யலாம். ஆனால், அந்தக் கவிதை பேசும் கரு அபாரமானது. வெகு நுட்பமாக ஒரு கலாசாரச் சீரழிவை இரண்டே பக்கங்களில் சொல்லிவிடுகிறார். இந்தக் கவிதையில், `நட்சத்திரங்களின் மொறுமொறுப்புடன் / நம் இரவுகள் / நம் வாயிலேயே அரைபடுகின்றன' என்கிற வரிகள் கவிதை அல்லாமல் வேறென்ன?

இன்னொரு கவிதை... `கொலைகளுக்கு முன்பே / சாட்சிகளின் கொலைகள். / மழைகளைவிட கௌரவம் வாய்ந்தது / மழைக்காலத்துக் கொசுக்களின் மரணம்.' இந்தக் கவிதை எதைச் சொல்லவருகிறது என்பதை விளக்கவேண்டிய அவசியமே இல்லை. அரசியல்வாதிகள், தொழிலதிபர்கள், பிரபலங்கள் எனப் பலரும் எதிர்கொள்ளும் வழக்குகள் அன்றாடம் தினசரிகளில் சந்தி சிரிப்பதை நாம் வாசித்துக்கொண்டுதான் இருக்கிறோம்.

வலிந்துஎழுதப்பட்டதைப்போலநா.வே.அருளின் சில கவிதைகள் தோன்றலாம். ஆனால், சமூகம் எதிர்கொள்ளும் அன்றாட நிகழ்வுகளையே, அவரின் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன. இந்தத் தொகுப்பில் `சர்வாதிகாரத்தின் ஒப்பனைக்கூடம்' என்கிற ஓர் அத்தியாயம் உண்டு. `சர்வாதிகாரத்தின் சமையலறை' என்கிற தலைப்பில் தொடங்குகிறது ஒரு கவிதை. அதில் அழுத்தமாக ஒன்றைச் சொல்கிறார்... `சர்வாதிகாரத்தின் சமையலறையில் / சத்துள்ளவை / சமையலுக்கு ஆவதில்லை' என்கிற வரிகள் வீரியமாக வெளிப்படுகின்றன.

இந்த அத்தியாயத்தின் கடைசி கவிதையாக, `சர்வாதிகாரத்தின் நிறம் ஆரஞ்சு' என்கிறார். `அரசவையில் / யாகப்புகை நடுவில் / மாந்திரீகர்கள். / கமண்டலத்தில் / வாரணாசியின் கங்காஜலம்' என்கிற வரிகளிலிருந்தே என்ன சொல்ல வருகிறார் என்பது புரிந்துவிடுகிறது.

இத்தாலியைச்சேர்ந்த மார்க்சிய தத்துவவியலாளர் கிராம்சியைத் தலைப்பாக முன்வைத்து எழுதப்பட்டிருக்கும் நா.வே. அருளின் இந்தக் கவிதைகளை இன்னும் விரிவாகப் பேசவேண்டியிருக்கிறது. அவை அனைத்தும் விவாதிக்கப்படவும் வேண்டியவை. அவரின் கவிதையில் ஓர் இடத்தைச் சொன்னால், அவர் தன் கவிதைகளில் என்ன சொல்லவருகிறார் என்பது நம் காலத்தை, அரசியல் நிகழ்வுகளை, அன்றாடப் பிரச்னைகளை ஊன்றி கவனிப்பவர்களுக்குப் புரிந்துவிடும்.

கோழைகளின் தேசத்தில்
குரங்கு
குருவிகளின் கூடுகளைக் கலைத்துப்போடுகிறது
அது செங்கோலை மாயக்கோலாக மாற்றிவிடுகிறது.

பாலு சத்யா <balusathyak@gmail.com>

தருமமிகு சென்னை-7

## சௌகார்பேட்டை

# சென்னையின் காஸ்மோபாலிட்டன் பேட்டை

சந்தியா நடராஜன்

1980களில் சென்னை பர்மா பஜாரைப் போன்று சௌகார்பேட்டைப் பகுதியில் பிரபலமாக இருந்த வணிக வளாகம் காசி செட்டித் தெரு மார்க்கெட். இந்த மார்க்கெட்டில் உள்ள கடைகளில் எல்லாவித சிங்கப்பூர் சாமான்களும் விற்பனையாகும். இந்தக் கடைக்காரர்களில் பலர் மார்வாடிகள்; சிலர் குஜராத்திகள்; சிலரில் சிலர் தமிழர்கள். காசி செட்டித்தெருக் கடைகளில் 'கஸ்டம்ஸ் அனுமதி பெற்ற கடை' என்ற அறிவிப்புப் பலகைகளும் இருக்கும். அதாவது, சுங்கத் துறையில் பறிமுதல் செய்யப்பட்டு விற்பனைக்கு வந்த பொருள்களையோ முறைப்படி இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களையோ வாங்கி, விற்க அனுமதி பெறப்பட்ட கடைகள் இவை. அதாவது, 'Customs Notified Shops'.

இந்தக் கடைகளை அவ்வப்போது சுங்க அதிகாரிகள் சோதனை செய்வதும் உண்டு. சோதனையின்போது கடையில் உள்ள பொருட்கள் கடைக்காரரிடம் உள்ள ஆவணங்களுடன் சரிபார்க்கப்படும். ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் பெறப்பட்ட பொருள்கள்கூட அப்படியே இருக்கும். விற்பனையே ஆகவில்லை என்று சாதிப்பார்கள். முறையற்ற வழியில் வந்தவை, முறைப்படி பெற்ற ஆவணங்களின் ஆதரவில் விற்பனையாகிவிடும். இந்திய அரசு இறக்குமதி விதிகளைத் தாராளமயமாக்கிய பின்பு இத்தகைய 'சுங்க அனுமதி பெற்ற கடைகள்' என்ற அறிவிப்புப் பலகைகள், அநாவசியமாகிக் காணாமல் போய்விட்டன.

காசி செட்டித்தெரு மார்க்கெட்டுக்குப் போக என்.எஸ்.சி போஸ் சாலையில் உள்ள 'தவே காம்ப்ளக்ஸ்' வழியாகச் செல்வோம். முதன்முறை அப்படிச் சென்றபோது 'தவே' என்ற பெயர் வித்தியாசமாகத் தெரிந்தது. அந்தப் பெயர் மட்டும் மனத்தில் நீங்காமல் நிலைபெற்றிருந்தது.



சௌகார்பேட்டையைப் பற்றி எழுத முனைந்த போது 'தவே' நினைவுக்கு வந்தது. சௌகார்பேட்டை ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரத்தில் பல ஆண்டுகள் வாழ்ந்த எனது நண்பரும் பிரபல ஜோதிடருமான லட்சுமி நரசிம்மனைத் தொடர்புகொண்டு பேசி வந்தேன். அவரது நினைவுச் சிதறல்களில் சௌகார்பேட்டையின் வரலாறும் வடிவமும் வேறு விதமாகத் தோற்றமளித்தன. இப்போது சென்னை மாநகர் ஒரு பிரபஞ்ச நகரம் என்றால், ஜெகன்மித்ர தேசம் என்றால், 'காஸ்மோபாலிட்டன் சிட்டி' என்றால் அதற்கு சௌகார்பேட்டையின் சமூகம் சான்றளிக்கிறது என்ற திட நம்பிக்கை எனக்குள் உருவாகியிருக்கிறது. சௌகார்பேட்டை ஏதோ ராஜஸ்தானிய சிகப்பு முண்டாசு கட்டிக்கொண்டிருக்கும் மார்வாடிகளின் இடம் என்ற பொதுக்கருத்து தகர்ந்துவிட்டது. பல இனங்களின், பல மொழியினரின் கூட்டு வாழ்வுதான் சௌகார்பேட்டை என்ற எண்ணம் வலுப்பெறுகிறது.

சௌகார்பேட்டையின் ஆரம்பகால வியாபாரிகள் சிந்தி இனத்தவர்களாகவும் குஜராத்திகாரர்களாகவும் இருந்திருக்கிறார்கள். ரத்தன் பஜாரில் உள்ள பிரபல கடைகளான லீலாராம்ஸ், ஜி.மங்காராம்ஸ், செல்லாராம்ஸ் போன்ற நிறுவனங்களின் உரிமையாளர்கள் இந்த வகைமைக்குள் அடங்குவார்கள். பிறகு மார்வாடிகள் என்ற பொதுப்பெயருக்கு உரிய ஜைனர்கள். இவர்கள் இரு பிரிவினர். ஒரு பிரிவினர் வானையே ஆடையாகக் கொள்ளும் திகம்பரர். சுவேதாம்பர் என்போர் ஜைன மதத்தின் இன்னொரு பிரிவினர். திகம்பரர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவு. மகேஸ்வரி இந்து இன மக்களும் இப்பகுதியில் வசிக்கிறார்கள். தொழிலதிபர் பிர்லா, மகேஸ்வரி இனத்தவர். அகர்சேன் வழிவந்த அகர்வால் சமூகத்தினரும் சௌத்ரிகளும் சௌகார்பேட்டையின் வணிகர்களில் கலந்து வாழ்ந்து வருகின்றனர்.

ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரமும் கிருஷ்ணப்ப நாயக்கர் அக்ரஹாரமும்








வணிகர்களின் அடித்தளமாகவும் வாழ்விடமாகவும் இருந்து வந்திருக்கின்றன.

சௌகார்பேட்டையின் இந்தி பேசும் வட இந்திய வணிகர்களோடு பிரதானமாக இருக்கும் இன்னொரு இனத்தினர் ஆரிய வைசிய பேரிச் செட்டிகள். இவர்களில் தெலுங்கு பேசும் செட்டியார்களும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களும் உண்டு. நூல் வியாபாரம் தொடங்கி மிளகாய் வியாபாரம் வரை பல்வேறு வியாபாரங்கள் இவர்களுக்கு அத்துப்படி. நாதெள்ளா உம்மிடி செட்டியார்கள் போன்ற கோமுட்டி செட்டியார்களின் பூர்விக மண்ணாக இந்தப் பகுதி இருந்திருக்கிறது.

சௌகார்பேட்டை ஆதிக்கம் செலுத்தும் இன்னொரு தொழில் வெள்ளி வியாபாரம். இதில் மராட்டியர்களின் கை ஓங்கியிருக்கிறது. சில ஆண்டுகளுக்கு முன்பு வெள்ளி வியாபாரத்தில் ஈடுபட்டு வந்த பரம்பரைப் பணக்காரரின் மகன் ‘டப்பா டிரேடிங்’ என்ற முறையற்ற பங்குச் சந்தை வியாபாரத்தில் பெரும் நட்டத்திற்கு உள்ளாகித் தற்கொலை செய்துகொண்ட செய்தியும் வெளிவந்தது.

நூல் வியாபாரத்திற்குத் தங்கசாலையும் துணி வியாபாரத்திற்குக் கிடங்குத் தெருவும் மையங்கள். வைர வியாபாரத்திற்கும் இந்தப் பேட்டையே கோட்டையாக இருந்திருக்கிறது. கோணி வியாபாரத்தில் புழங்கும் ஜனப்ப செட்டிகளும் எண்ணெய் வியாபாரம் செய்யும் வாணியச் செட்டிகளும் வலம் வருகிற பூமி சௌகார்பேட்டை. கோலப்பெருமாள் செட்டிகளும் சென்னை வைஷ்ணவ கல்லூரி நிறுவனர்களும் தடம் பதித்துச் சென்ற பாதைகள் சௌகார்பேட்டையின் தெருக்கள்.

இப்படிப் பல மொழியினர், பல்வேறு இனத்தினர் கூடி வாழ்ந்து வணிகம் செய்வதால் வளம் பெற்ற இந்தப் பேட்டை ‘சென்னை ஒரு காஸ்மோபாலிட்டன் சிட்டி’ என்ற கூற்றுக்கு நேரடி சாட்சியல்லவா!

இக்கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்ட ‘தவே காம்ப்ளக்ஸ்’ பற்றி லட்சுமி நரசிம்மனிடம் உரையாடியபோது அவர் சௌகார்பேட்டையின் அறியப்படாத இன்னொரு சமூகம் பற்றிப் பேசினார். சௌகார்பேட்டை, தங்கசாலையில் அமைந்திருக்கிறது ஏகாம்பரேஸ்வரர் கோயில். சென்னையின் மிக நீண்ட சாலைகளில் ஒன்று தங்கசாலை. சென்னையின் ‘மெட்டல் மார்ட்’டும் இந்தச் சாலைதான். சென்ட்ரல் ரயில்வே ஸ்டேஷனை அடுத்து உள்ள சதர்ன் ரயில்வேயின் மிகப்பெரிய அலுவலகத்தை ஒட்டித் தொடங்கும் இச்சாலை கிலோமீட்டர் கணக்கில் நீண்டு ‘மின்ட்’ பேருந்து நிலையத்தில் வடசென்னையைத் தொடும். இச்சாலையை நடந்து கடக்க முனைபவர்கள் சாகசக்காரர்கள். சென்னையின் மிகப் பழமையான தெருக்களில் மிக நீளமான தெரு தங்கசாலை. நீளம்

ஏறக்குறைய மூன்று கிலோ மீட்டர்.

ஏகாம்பரேஸ்வரர் ஆலயத்தைச் சுற்றியுள்ள மூன்று தெருக்களும் ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரம் என்று அழைக்கப்படுகிறது. இந்த அக்ரஹாரத்தில் தட்சிண குஜராத்தி கேடாவால் என்ற சமூகம் வாழ்ந்து வணிகம் செய்து தழைத்திருக்கிறது.

யார் இந்த கேடாவால்?

தஞ்சாவூர் குஜராத்தி பிராமணர்கள் என்று அழைக்கப்படும் இவர்கள் தமிழகத்துக்குப் புலம் பெயர்ந்து வந்தவர்கள். முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இந்தப் பெயர்வு ஆரம்பித்திருக்கலாம் என்கிறார்கள். இன்றும் இவர்கள் வீட்டில் குஜராத்தி மொழியிலேயே பேசுகிறார்கள். திருநெல்வேலி, மதுரை, திருச்சி போன்ற நகரங்களுக்குச் சென்றிருந்தாலும் இவர்கள் இறுதியாக நிலைபெற்ற நகரம் தஞ்சாவூர். தஞ்சாவூரிலிருந்து இடம்பெயர்ந்து ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரத்தில் சிவனடிக்கீழ் அடைக்கலமாகி இருக்கிறார்கள். இவர்கள் ரிக் வேத பிராமணர்கள். இவர்களுக்குக் குலகுரு காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகள். இவர்களில் ஒரு சிலருக்குத் தெலுங்கு சம்பிரதாயமும் உண்டு. அலமேலு மங்கைத் தாயாரின் கழுத்திலிருக்கும் பொட்டுத்தாலி அணிந்திருப்பார்கள் இப்பிரிவுப் பெண்கள். இந்தத் தஞ்சாவூர் குஜராத்தி பிராமணர்களின் குடும்பப் பெயர்களில் ஒன்றுதான் 'தவே'.

என்.எஸ்.சி போஸ் சாலையில் உள்ள தவே காம்ப்ளக்ஸின் உரிமையாளரும் தஞ்சாவூர் குஜராத்தி பிராமணர் குடும்பத்தைச் சேர்ந்தவருமான ஜீன்னி பாய் என்ற பெண் தனது பார்வையற்ற மகனுடன் அந்த வளாகத்தின் மேல் தளத்தில் வசித்து வந்ததாக நரசிம்மன் சொன்னார்.

'தவே' தடத்தில் என் சிந்தை சிறை பெறா நீர் போல் சென்றுகொண்டே இருந்தது. சைவ சித்தாந்த உலகம் தலை வணங்கும், மறைந்த பெரியவர் தஞ்சாவூர் டி.என். ராமச்சந்திரனின் புதல்வர் புகழ்மிகு உளவியல் மருத்துவர் டாக்டர் சுரேஷ் சமீபத்தில் சந்தியா பதிப்பகத்திற்கு வந்திருந்தபோது அவரிடம் தஞ்சாவூர் தவேக்கள் பற்றி விசாரித்தேன். டாக்டர் சுரேஷின் சகோதரர் ரமேஷின் மனைவியே ஒரு 'தவே' என்பது தெரியவந்தது. தஞ்சாவூரில் உள்ள கேடவால் பிராமண சங்கத்தின் செயலராகப் பணியாற்றிவரும் மணி தவேயிடம் என்னை ஆற்றுப்படுத்தினார்.

"எங்களோட சமூகத்தில் தவே, மேத்தா, டாக்கர், திரிவேதி, சுக்கல் என்று பல குடும்பப் பெயர்கள் உண்டு. இவை சாதிப் பெயர்கள் அல்ல. இவை surnames. அதைப்போல T.R.ஜோஷி அண்ட் சன்ஸ் என்ற பெயரை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ஒரு காலத்தில் வைர வியாபாரத்தில் பிரபலமான பெயர். ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரத்தில்தான் அவா இருந்தா. T.ராஜாராம் ஜோஷி வைர வியாபாரத்தில் கொடிகட்டிப் பறந்தவர். "சில ஜோஷி துணி வியாபாரம் செய்து வந்தா. கீழ்ப்பாக்கத்துல 'மேத்தா'ன்னு இருப்பா. தஞ்சாவூரிலும் இருப்பா. நீங்க கேள்விப்பட்டிருப்பீங்க. பரமாச்சாரியாளோடு சந்திரசேகர்னு ஒருத்தர் இருந்தா. அவர் பேரு சந்திரசேகர் மேத்தா. இன்னிக்கும் இந்தப் புதுப் பெரியவாளோட 'விஜய்'ன்னு ஒரு பையன் இருப்பான் - பக்கத்திலேயே, அவன் மேத்தாதான். தஞ்சாவூர்ல இருக்க மேத்தா ஹோட்டல் பிசினஸ்ல இருக்கா. தவிர பாண்டியான்னு இருக்கா. இவா தஞ்சாவூர்ல இருக்கா. கொஞ்ச பேரு மெட்ராஸ்ல இருக்கா. இது மாதிரி எங்க சமூகத்தில ஒம்பது 'சப் டிவிஷன்' இருக்கு.

1956ல தஞ்சாவூர் கரந்தட்டாங்குடியில (கரந்தை) ஒரு கோயில் எங்க சமூகத்தவா கட்டினா. நான் அந்தக் கோயில் டிரஸ்டியா இருக்கேன். நல்ல பராமரிப்போட இருக்கு. அதே போலத் தஞ்சாவூர்ல 'குஜிலி மடம்'ன்னு ஒன்னு இருக்கு. தஞ்சாவூர் குஜராத்தின்னு சொல்லுவா. இவா எப்படி இங்க வந்தான்னு கதைகதையா சொல்லுவா. ஆனா அதுக்கு என்னுட்ட ஒன்னும் ரெக்கார்டு இல்ல.

நாங்க குஜராத்ல 'கேடா' (khada) என்ற இடத்துலேந்து வந்தவங்க. அதனால எங்கள 'கேடாவால்'ன்னு சொல்வாங்க. நாங்க யாசகம் வாங்கமாட்டோம். கேடாவால் பிராமணா குஜராத்லேந்து மகாராஷ்ட்ரா வந்து அங்கிருந்து விஜயநகரம் வந்திருக்கா. அப்போ சௌராஷ்டிர சமூகமும் கிளம்பியிருக்கு. இன்னமும் விஜய நகரத்துல சில குடும்பங்கள் இருக்கு. அங்கேந்து திருநெல்வேலி வந்திருக்கா. இன்னமும் 'பாண்டியா தெரு'ன்னு ஒரு தெரு இருக்கு. நெல்லையப்பர் கோயில்ல எங்களுக்கு ஒரு நாள் மண்டகபடி உண்டு. அங்கிருந்து மதுரைக்கு வந்திருக்காங்க. பட்டுநூல்காரர்ன்னு சொல்லுவீங்கில, அவுங்க மதுரைல தங்கிட்டாங்க. மராட்டிகாரங்க சரபோஜி மன்னர் இருந்த தஞ்சாவூருக்கு வந்துட்டாங்க. நாங்க திருச்சிக்குப் பக்கத்துல 'கிருஷ்ணராயபுரம்' ங்கிற இடத்துக்கு வந்து அங்கிருந்து திருச்சிக்கு வந்துட்டோம். இன்னமும் திருச்சியில டாக்கர் (Tawker) தெருன்னு ஒரு தெரு உண்டு. அங்க எங்க குடும்பங்கள் இருக்கு. அதற்கப்புறம்தான் நாங்க தஞ்சாவூர் வந்தது. இதுதான் தஞ்சாவூர் குஜராத்தி பிராமணர்களின் கதை' என்று சொல்லி அவர்களது பூர்வ கதையை முடித்தார்.

தஞ்சாவூரில் 'தவே சந்து' என்று ஒரு தெருவும் இருக்கிறது. உள்ளூர் தெய்வங்களே தஞ்சாவூர் குஜராத்தி பிராமணர்களின் குலதெய்வங்களாக உள்ளன. மணி தவே குடும்பத்துக்குக் குலதெய்வம் சுவாமிமலை முருகன். தஞ்சாவூர், மேல அலங்கம் சுப்ரமணியர் தவேக்கள் சிலருக்குக் குலதெய்வம். வடக்கு வாசல் முருகனை வழிவழியாக வழிபடுவோரும் உண்டு. தஞ்சாவூரிலிருந்து





இடம்பெயர்ந்த கேடாவால் பிராமணர்கள் காலமாற்றத்திற்கேற்ப மெட்ராஸ் சென்று சௌகார் பேட்டை ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரத்தில் குடியேறினார்கள். இடையர்பாளையம் உள்ளிட்ட சௌகார்பேட்டையின் பல பகுதிகளில் அங்கும் இங்குமாக இவர்கள் சமூகம் விரிவடைந்தது. இன்றும் ஏகாம்பரேஸ்வரர் ஆலயத்திற்கு எதிரே இச்சமூகத்தின் சங்கம் 'தட்ஷிண குஜராத்தி கேடாவால் சமாஜ்' என்ற பெயரில் தங்கசாலை, இலக்கம் 375இல் இயங்கி வருகிறது. இந்த இடத்தை நான் நேரில் சென்று பார்த்தபோது அச்சங்கம் பூட்டிக்கிடந்தது. வாசலில் பழங்கள் விற்றுக்கொண்டிருந்த ஒரு பெண்ணிடம் விசாரித்தபோது, 'சனிக்கிழமை மாலை நேரத்தில் அந்த அலுவலகம் திறந்திருக்கும்; ஆட்கள் வருவார்கள்' என்ற பதில் கிடைத்தது. அந்த சமாஜத்தில் ஒரு சின்னக்கோயில் இருப்பதாகவும் அங்கே தஞ்சாவூர் குஜராத்தி பிராமணர்கள் வீட்டுத் திருமணங்கள் நடைபெறுவதுண்டு என்றும் மணி தவே கூறுகிறார். இந்த சமாஜத்தை மடம் என்றே தவேக்கள் குறிப்பிடுகிறார்கள். பிறகு காலப்போக்கில் இந்த பிராமணக் குடும்பங்கள் அம்பத்தூருக்கும் அயனாவரத்துக்கும் பெரம்பூருக்கும் கீழ்ப்பாக்கத்துக்கும் நகர்ந்துவிட்டன.

அயனாவரம் சிவன் கோயில் நிர்வாகம் இன்னும் தவேக்களின் கட்டுப்பாட்டில்தான் உள்ளது. தற்போது கேடாவால் பிராமணர்களின் எண்ணிக்கை உலக அளவில் இரண்டாயிரத்தைத் தாண்டாது. தஞ்சாவூரில் மட்டும் சுமார் பத்துக் குடும்பங்கள் உள்ளன. திருச்சி, மதுரை, நெல்லை ஆகிய நகரங்களில் ஊருக்கு நான்கு கேடாவால் குடும்பங்கள்தான் உள்ளன. ஸ்ரீகாகுளத்தில் நான்கு குடும்பங்களும் ஐதராபாத்தில் ஐந்து அல்லது ஆறு குடும்பங்களும் பாம்பே டெல்லியில் ஓரிரு குடும்பங்களும் வாழ்ந்து வரலாம். பார்ஸி இனத்தவரைவிட கேடாவால் பிராமணர்களின் எண்ணிக்கை குறைவு என்று சொல்லிவிடலாம். அத்தகைய சிறுபான்மைச் சமூகம் உண்மையான சௌகார்களாக (செல்வந்தர்களாக) இந்த சௌகார்பேட்டையில் வாழ்ந்திருக்கிறார்கள்.

நொளம்பூர் முழுவதும் செங்கல் சூளையில் ஈடுபட்டிருந்தவர்கள் கேடாவால் பிராமணர்களின் மேத்தா குடும்பத்தினர். நடிகர் சோபன் பாபு வீடு உள்ள நுங்கம்பாக்கம் மேத்தா நகரை உருவாக்கியவர்களும் இவர்களே. ஆழ்வார் திருநகரில் நிலம் படைத்தவர்களாகவும் ஆதிக்கம் செலுத்தியிருக்கிறார்கள். தியாகராய நகரில் உள்ள நீலகண்ட மேத்தா தெருவிலும் பெருவாரியாக இந்தப் பிராமணர்களே வாழ்ந்து வந்திருக்கிறார்கள்.

இந்தியன் வங்கியில் இயக்குநராக இருந்த ஜி.ரெங்கராஜ மேத்தாவும் கேடாவால்தான். T என்ற எழுத்து தஞ்சாவூரைக் குறிக்கும். கலா கே டாக்கர் என்பவர் லேடி வைஷ்ணவக் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியுள்ளார். நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு தங்கசாலையில் இருக்கும் இந்து தியாலஜிகல் மேல்நிலைப் பள்ளியில் முதல்வராகப் பணியாற்றிய பாலகிருஷ்ண ஜோஷி சிறந்த கல்வியாளராக இந்தச் சமூகத்தினரால் நினைவுகூரப்படுவதாகச் சொல்கிறார், இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் நிர்வாக இயக்குநராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள சுந்தரேச தவே.



ஆர். சிவசங்கர் மேத்தா என்பவர் நவம்பர் *1963* முதல் மார்ச் *1964* வரை சென்னையின் மேயராகப் பணியாற்றியிருக்கிறார். இவர் ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரம் இலக்கம் *11*இல், பூர்விக வீட்டில் வாழ்ந்தவர். அம்பத்தூர் குளோத்திங் நிறுவனத்தில் மேலாளராகப் பணியாற்றி வந்த எனது நண்பர் பிரகாஷ் மேத்தாவின் தந்தையாரின் பங்காளிதான் மேயர் சிவசங்கர் மேத்தா.

சென்னையில் மேத்தா குடும்பங்களை வைர வியாபாரத்தின் முன்னோடிகள் என்று சொல்லலாம். பிரகாஷ் மேத்தாவின் தந்தை T.சதாசிவ மேத்தா மிகப்பெரிய நில உடைமையாளராக வாழ்ந்திருக்கிறார். டி.ஆர். டாக்கர் அண்ட் சன்ஸ் சென்னையின் மிகப்பெரிய வைர வியாபார நிறுவனமாக இருந்திருக்கிறது. T.R. டாக்கர் யாரென்றால் பிரகாஷ் மேத்தாவின் அம்மா வழித் தாத்தா. இந்தக் குடும்பமும் ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரத்தையே வாழ்விடமாகக் கொண்டிருக்கிறது. இன்று அண்ணாசாலையில் V.G. பன்னீர்தாஸ் ஷோரூம் இருக்கும் இடத்தில்தான் T.R. டாக்கர் அண்ட் சன்ஸ் நிறுவனம் தொழிற்பட்டிருந்தது. ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரம் இலக்கம் *38*இல் வாழ்ந்த T.R.ஜோஷியும் வைர வியாபாரம் செய்தவரே. இலக்கம் *39*இல் பிரகாஷின் வீடு இருந்தது. இவர்கள் எல்லோரும் உறவினர்கள். T.R. டாக்கர் அண்ட் சன்ஸ் நிறுவனத்திற்கு பீட்டர்ஸ் சாலையில் ஒரு விருந்தினர் மாளிகை இருந்தது. வெளிநாட்டிலிருந்து வரும் வெள்ளைக்கார வாடிக்கையாளர்கள் இந்த மாளிகையில்தான் தங்குவார்கள். பிரகாஷ் மேத்தா, டாக்கர் அண்ட் சன்ஸ் குடும்பத்தை வியந்து பேசுவார். T.R.டாக்கர் அண்ட் சன்ஸ் நிறுவனத்திற்கான விசிட்டிங் கார்டு லண்டனில் அச்சடித்து வருமாம். சென்னையில் முதன்முதலாக கார் வாங்கிய குடும்பம் என்ற பெருமையும் அவர்களுக்கு உண்டாம். ஹைதராபாத் நிஜாமுக்கு வைரக்கற்கள் பதித்த பிளாட்டின கோட் ஒன்று தயாரித்துத் தந்தார்களாம். கோட் போன நேரத்தில் பெரிய நிஜாம் மவுத் ஆகிவிட்டாராம். நிஜாமிடமிருந்து வரவேண்டிய பெரும் தொகை வராமல் போயிற்றாம். இப்படியாக டாக்கர் குடும்பம் திவாலாகிப் போனதாம்.

அண்ணாசாலையில் சாந்தி தியேட்டருக்கு அருகில் டாக்கர் வைர வியாபாரம் நடத்தி வந்தார்கள் என்றால் ஆனந்த் தியேட்டருக்கு அருகில் உள்ள மேடோபார்ம் சொத்துகளுக்கு மேத்தாக்களே அதிபதி. பிரகாஷின் தந்தை சதாசிவ மேத்தாவின் சொத்துகள் *1950*களில் பிளாட்டுகளாகி மேத்தா நகர் உருவாகியிருக்கிறது. இவர்கள் எல்லோருக்கும் அருள்புரிந்திருப்பவர் ஒருவரே. அவர் சௌகார்பேட்டை ஏகாம்பரேஸ்வரர்.

*(தொடரும்)*

சந்தியா நடராஜன் <sandhyapathippagam@gmail.com>


**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**




# Shri Hospitals

**Multi Speciality Hospital with 24 hours Trauma & Critical Care**

103-C, Tamil Sangam Road (Behind Anna Park), Sankar Nagar, Salem - 636 007.

☎: 0427 4300027, 4300028 📱:77 08 3333 08

**TOLL FREE NO : 1800 8 902 902**

✉ : info@shrihospitals.in 🌐: www.shrihospitals.in






## OUR SPECIALITIES

- Cardiac Care & Preventive Cardiology
- Pulmonology
- Neurosciences
- Bone & Joint Clinic
- Plastic & Cosmetic Surgery
- Obstetrics And Gynecology
- Paediatrics & Neonatology
- Renal Clinic
- Gastroenterology
- Internal Medicine
- Accident & Emergency
- Anaesthesiology & Critical Care
- Psychology

## HEALTH PACKAGES

- Master Health Package
- Cardiac Package
- Diabetic Package
- Renal Package
- Liver Package
- Lung Package
- Women health Package
- Smoker's Package
- 'Breathlessness' Package

## OUR FACILITIES

- Open 24x7
- Diagnostics Laboratory
- Pharmacy
- Radiology & Imaging
- Patient Rooms
- Accident & Emergency Centre
- Intensive Care Unit
- Ambulance Services
- Cafetaria

☞ Tamil Nadu Chief Minister's Comprehensive Health Insurance Scheme ☞ Star Health and Allied Insurance Company ☞ All Private Health Insurance Schemes are available

Posted at patrika channel egmore (Posted between 28-31st of Every month)
Date of Publications : 25th of every month  Reg.No.TN/TBM/150/2024-2026.  ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2024-2026.